உ

கடவுள் துணை.



# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.



"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி ககூ.] துர்மதி-௵ ஆடி-௴ [பகுதி கூ.
Vol. XIX. July—August—1921. No. 9.

உள்ளுறை.



பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

வருஷம் ஒன்றுக்கு ரூ. 4.] [தனிப்பிரதி அணா-8.

வெளிநாடுகளுக்கு ரூ. 4—8—0.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி ௧௯.] துர்மதி-௵ ஆடி-௴ [பகுதி ௯.

Vol. XIX. July—August—1921. No. 9.

## ஆந்தையைப்பற்றிய ஐயம்.

"மடங்கலிற்சினை இமடங்காவுள்ளத்
தடங்காத்தானைவேந்தருடங்கியைந்
தென்னொடுபொருதுமென்பவவரை
யாரமாலறத்தாக்கித்தேரோ
டவர்ப்புறங்காணேனாயிற்சிறந்த
பேரமருண்கணிவளினும்பிரிக
வறநிலைதிரியாவன்பினவையத்துத்
திறனிலொருவனைநாட்டிமுறைதிரிந்து
மெலிகோல்செய்தேனாகுகமலிபுகழ்
வையைசூழ்ந்தவளங்கெழுவைப்பிற்
பொய்யாயாணர்மையற்கோமான்
மாவனுமன்னெயிலாந்தையுமுரைசா
லந்துவஞ்சாத்தனுமாதனழிசியும்
வெஞ்சினவியக்கனுமுளப்படப்பிறருங்
கண்போனண்பிற்கேளிரொடுகலந்த
வின்களிமகிழ்நகையிழுக்கியானொன்றோ
மன்பதைகாக்குநீள்குடிச்சிறந்த
தென்புலங்காவலினொரீஇப்பிறர்
வன்புலங்காவன்மாறியான்பிறக்கே"

என்பது ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் தன்னோடிகல்கருதின மாற்றார்மீது கூறிய வஞ்சினமொழி. இதனால் ஆந்தையென்பானொருவன்

பாண்டியற்குக் கண்போல நண்பிற்சிறந்தானென்பதும் அவன் எயிலென்னுமூருக்குத் தலைவனென்பதும் அறியலாவன.

இது நிற்க; இலக்கண நூல்களில் 'ஆதன்தந்தை ஆந்தை' யென மரூஉமொழிக் குதாரணங்காட்டப்பட்டமைகொண்டு, ஆந்தையென்னும் பெயர் அவன் ஆதனுடைய தந்தையாதல்பற்றியே யிடப்பெற்றதென்று பலாறுங் கருதப்பட்டுவருகின்றது. சிறிது ஆழ்ந்துநோக்கில் அங்ஙனங்கொள்ளுதலிற் பெரிதும் இயைபின்மைதோற்றுதலால் அஃதையப்படுதலுடைத்து.

ஆந்தையென்பான் ஆதனுடையதந்தையெனின் ஆந்தை முற்றோன்றியவனும் ஆதன் பிற்றோன்றியவனுமாவர். பின்பிறந்தான்பெயரோடு கூட்டி முன்பிறந்தானுக்குப் பெயர்வழங்குவது முறைமையன்றென்பது நன்கறிந்ததாகலின் அது பொருந்துவதன்றென்று தோன்றுகின்றது. மேலும் மகன்பிறத்தற்குமுன்பு தந்தை பெயரில்லாதிருந்தானென்பது இயைபில்லாததேயாகும். அன்றி வேறுபெயரிருந்து பின்னர் வீழ்ந்ததெனின் அதுவும் பொருந்தாது. இன்னார் தந்தை இன்னாரென்பதுபட அவர் பெயரோடு நன்கு பயிலாதார் ஒருவரிருவர்கூறுமத்துணையல்லது, அதுவேயவர்க்குப் பெயராகப் பலராலும் வழக்குப்பெறுதல் யாண்டுமில்லை.

ஒருவர்க்கு இருவர்முதலிய பலர் மகன்முறையினராதலுங் கூடும். அங்ஙனமாகத் தந்தைக்கெய்தும் பெயர் எவருடையதாகுமென் றறிந்து வழங்குதலு மியலாதாம். ஆகவே, இவற்றால் 'ஆதனுக்குத் தந்தை ஆந்தை' என்னுதல் பொருந்துவதென்று தோன்றவில்லை.

இனிப் பெயர்கூறும் முறையில் இன்னார்மகன் இன்னாரென்று கூறுதலே இன்றும் வழக்காறுயுள்ளது. இதனை அக்காலத்தான்றோர் பெயர்களுள்ளுங் காணலாம். அவை:—நன்னூர்கிழார்மகனார்; பெருங்கோழிநாய்கன்மகன் கண்ணனார்; மதுரை அளக்கர்ஞாழார்மகனார் மள்ளனார்; மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனார்; அதியமானெடுமானஞ்சிமகன் பொகுட்டெழினி; ஒல்லையூர்கிழான்மகன் பெருஞ்சாத்தன்; மாற்றூர்கிழார்மகனார் கொற்றங்கொற்றனார்; ஆர்க்காடுகிழார்மகனார் வெள்ளைக்கண்ணத்தனார்; உமட்டூர்கிழார்மகனார் பரங்கொற்றனார், எருமைவெளியனார்மகனார் கடலனார்; காட்டூர்கிழார்மகனார் கண்ணனார் என்பவும் பிறவுமாம்.

இன்னும், பெண்பாலரைப் பெயர்வழங்குவதிலும், பாரிமகளிர் என் றிங்ஙன மன்றிப் பிறவாறு காணப்படவில்லை.

முதியோர்பெயர்கொண்டு இளையோரைக் குறித்தலே முறை யென்பது இமயவரம்பன்றம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவன்; சோழன்நலங்கிள்ளிதம்பி மாவளத்தான் என்பவற்றுள்ளுங் காணப் படும். இங்ஙன மன்றி இன்னான் தமையன் என்று காண்ட லரிது.

பூதப்பாண்டியன்தேவி பெருங்கோப்பெண்டு என்புழியும் மூத் தோர்பெயரே முற்கூறப்பட்டது.

இராகவன், தாசரதி, காகுஸ்தன் ஸௌமித்திரி என்பனபோன்ற வட மொழிவழக்குகளும் இக்கருத்தே பற்றியுள்ளன.

இனி, நக்கீரனர்க்கு மகன்முறையாயினர் கீரங்கொற்றனர் என்பவர். இங்கும் கீரன் என்ற தந்தையின்பெயரே முற்கூறப்பட்டது.

இவற்றைக்கொண்டுநோக்குமிடத்து ஆதன் என்றபெயரை முன்ன ருணர்த்தித் தந்தை யென்பதைப் பின்னருணர்த்தும் ஆற்றலுடைய ஆந்தையென்னும்பெயரும், ஆதனுடையதந்தையென்று பொருள் கொள்ளுதலில் இயைபுடைத் தன்றென்று தோன்றுகிறது.

இலக்கணநூலார், ஆதன்தந்தை ஆந்தை, பூதன் தந்தை பூந்தை, வடுகன்தந்தை வடுகந்தை என்பவற்றை மரூஉமொழிகளென்றனர். செந் தமிழ்ச்சான்றோர் திருப்பெயர்களுள்ளே சாத்தந்தையார் என்பதும் ஒன்று (புறம். 80). அது, முன்னர்க்கூறியனபோலவே, சாத்தன் தந்தை என்னு மிருமொழிகளின்சேர்க்கையேயென்பது நன்குணர லாகும். ஆகவே, ஆந்தை யென்பதற்கு ஆதனுடையதந்தையென்று பொருள்கொள்ளுதல்போலவே, சாத்தந்தையென்பதற்கும் சாத்த னுடையதந்தையென்று பொருள்கொள்வோமாயின், சாத்தந்தையார் தமப்பனாகவும் சாத்தன் அவர்மகனாகவு மிருத்தல்வேண்டும். இது நிற்க; பதினெண்கீழ்க்கணக்கினுளொன்றாகிய திணைமொழியைம்பதின் ஆசிரியர், 'சாத்தந்தையார்மகனர் கண்ணஞ்சேந்தன' ரெனப்படுவர். இதனாற் கண்ணஞ்சேந்தனரே சாத்தந்தையார்மகனா ரென்பது இனிது பெறப்பட்டது. முன்னர் அவர்மகன் சாத்தனெனப் பெறப்பட்டது. அஃ திதனோடு மாறுகொள்ளுதலின் சாத்தந்தை யென்பதற்குச் சாத்த

னுடைய தந்தையென்று பொருள்கொள்ளுதல் பொருந்தாதென்று தோன்றுகிறது. இனிச் சாத்தந்தையார்க்கு மகன்முறையாயினர் சாத்தனும் கண்ணஞ்சேந்தனருமாகிய இருவரென்றுகொள்ளின் சாத்தனாலேயே அவர்பெயர் பெறுதற்கு ஏதுவின்மையின் அதுவும் நன்குபொருந்துவதின்று. 'எயினந்தை மகனர் இளங்கீரனர்' என்னும் பெயரும் (அகம்,3) 'சாத்தந்தையார் மகனர் கண்ணஞ்சேந்தனர்' என்பதோடு பெரிதும் ஒப்புமை யுடையதாய் மேற்கண்ட கொள்கையை விரோதிக்கிறது.

இங்ஙனம் ஆந்தையென்றபெயருக்கு ஆதனுடைய தந்தையென்று பொருள்கொள்ளுதல் பலவகையானு மிடர்ப்பாடுடையதாகலின் அதற்கு ஆதனாகிய தந்தையையுடையவன், அல்லது ஆதனைத் தந்தையாகவுடையவன், என அன்மொழித்தொகையாற் பொருள்கொள்ளுதல் கூடாதா என்பதே ஈண்டெடுத்துரைக்கப்புகுந்த முக்கியமான விஷயமாகும். அங்ஙனங்கொள்ளுங்கால் 'ஆதனுடைய மகன் ஆந்தை'யென்பதே போதரும். அஃதாயின், ஆதன்தந்தை ஆந்தையென, இலக்கணநூலார்கூறியது வழுவுடைத்தாம்பிறவென்னின், அற்றன்று; என்னே? அவர், ஆதனென்னும் நிலைமொழியும் தந்தையென்னும் வருமொழியுங் கூடியவழி ஆந்தையெனமருவிற் றென்னு மிலக்கணமுடிபுகாட்டினரன்றி, ஆதனுடைய தந்தையென்றேனும் ஆதனுக்குத்தந்தையென்றேனும் ஆந்தையென்னும் பெயரின்பொருளினை வேற்றுமைவழியில் விரித்துரைத்தாரல்லராகலி னென்பது. அவ்விலக்கணமுடிபு, ஆதன் + தந்தை = ஆந்தை; என்றெழுதிப் படிக்கத்தக்கது.

இனி, எந்தையென்பது என்னுடையதந்தையெனப் பொருள்தருமாறுபோல ஆந்தையென்னுஞ்சொல்லும் ஆதனுடையதந்தையென்றே பொருள்பயக்குமெனின், அஃதொக்கும்; ஆயினும், எந்தையென்பது எம்முடையதந்தை யென்னும் வேற்றுமைப்பொருளொன்றேதோன்ற விகாரப்பட்ட நிலைமொழியுடைய முறைப்பெயர். ஆந்தையென்பது அவ்வாறன்றி யல்வழிப்பொருளுமுடன்கொள்ளக்கிடக்குமியற்பெயராதலால் அதற்கு எந்தையென்பது காட்டாகமாட்டாது. அன்றியும் அன்மொழித்தொகையான் ஒற்றுமைப்பொருள் கொள்ளத்தகுதியுள்ளவிடத்து வேற்றுமைப்பொருள்கொள்ளுதல் மிகையுடைத்தாகும். ஆகவே, ஒற்றுமைப் பொருளில் ஆதனாகிய தந்தையையுடையான் ஆந்தை என்றாகி ஆந்தை ஆதன்மகன் என்பதே போந்தபொருளாகும்.

6

இவ்வாறே, பூந்தை பூதனுடைய மகன், வடுகந்தை வடுகனுடைய மகன், சாத்தந்தை சாத்தனுடையமகன், எயினந்தை எயினனுடைய மகனென்பதே போந்தபொருளாகக் கொள்ளத்தகும். பிசிராந்தையார், ஓதலாந்தையா ரென்பனவற்றிற்கு மிஃதொக்கும்.

இனிப் பிறிதொருசான்று மிக்கொள்கையையே வலியுறுத்து கின்றது. சிலப்பதிகாரக் கட்டுரைகாதையின்கண்ணே,

"உதவாவாழ்க்கைக்கீரந்தைமனைவி
புதவக்கதவம்புடைத்தனனொருநா
ளரசவேலியல்லதியாவதும்
புரைதீர்வேலியில்லெனமொழிந்து
மன்றத்திருத்திச்சென்றீரவ்வழி
யின்றவ்வேலிகாவாதோவெனச்
செவிச்சூட்டாணியிற்புகையழல்பொத்தி
நெஞ்சஞ்சுடுதலினஞ்சிநடுக்குற்று
வச்சிரத்தடக்கையமரர்கோமா
னுச்சிப்பொன்முடியொளிவளையுடைத்தகை
குறைத்தசெங்கோற்குறையாக்கொற்றத்
திறைக்குடிப்பிறந்தோர் .............."

எனவருதல் கற்றோர்பலரு நன்கறிந்தது. கீரந்தையென்னும் பெயருக்குக் கீரனுடையதந்தையென்பதே பொருளாயின் இதிற் குறித்த கீரந்தையென்பானுக்குத் தக்கபருவம்நிறைந்த கீரன் என்ற மகனொருவன் அக்காலத்திருந்தானாகல்வேண்டும். கதையின்போக்காலும் பிறகுறிப்புக்களாலும் அக்காலத்து அக்கீரந்தைக்கு மகனொருவன் இருந்திருத்தல் சாலாதென்று எண்ண இடமுண்டு. ஆதலால், கீரந்தை என்பான் கீரனுடையமகன் என்று கொள்ளுதலே பொருத்தமுடைத்தாம். அன்றியும், கீரனுடையதந்தையே கீரந்தையாயிற்,கீரந்தைமனைவி (கீரனுடையதந்தையினுடைய மனைவி) யென்று சுற்றிக்கூறுதலினும் 'கீரன்றாய்' என எளிதிற் கூறுதலே ஆண்டைக் கேற்புடைத்தாகும். ஆசிரிய ரங்ஙனங்கூறாமையும் கீரனுடையமகனே கீரந்தை என்றுகருத இடந்தருகின்றது. இவற்றையெல்லா மின்னு மறிஞர்களாராய்ந்து உண்மையினை நன்கு விளக்குவார்களாக.

T. N. அப்பனையங்கார்
மதுரை.

ஸ்ரீ

# ஒரு குறிப்பு.



சென்ற சித்திரைமாதச்செந்தமிழ்ப்பகுதியில், 'சேய்மையன்மையில்' என்று மரிச்சந்திரபுராணச்செய்யுளில் ஒருதிருத்தத்தைக்குறித்து எழுதினேன். அது ஸ்ரீமான் **K. G.** சேஷையரவர்களால் முன்னரே வெளியிடப்பட்டதென்று இப்பொழுது வெளிவந்த ஆனிமாதப் பகுதியா லறியப்படுகிறது. ஆதலி னதுபற்றிய இக்குறிப்பு இன்றியமையாததாகும்.

'சத்தியதேவதைகதை' என்னும் புத்தகத்தையேனும் அதிற் குறித்துள்ளதாகச் சொல்லப்படும் திருத்தத்தையேனும் யான் இதுகாறுங்கண்டதில்லை. பார்த்திருப்பின் அத்திருத்தத்தையே மீட்டும் யான் வெளியிடவேண்டுவதில்லை; அன்றி, அது இன்னரால் முதன் முறையாகக் கண்டு வெளியிடப்பட்டதென்றேனுங் குறித்திருப்பேன்.

இது நிற்க: பல ஆண்டுகளுக்குமுன்னரேவெளிப்பட்டதாகச்சொல்லப்படும் அவ்விஷயத்தைச் சிறிதுமறியாத என்போன்றார் பலருளரென்றே நினைக்கிறேன். 'சேய்மையன்மை' என்ற அச்செய்யுளுடன் கூடிய பகுதி கடைசிமுறையாக 1915-ஆம் வருஷம் ஸ்கூல்பைனல் வகுப்புக்குப் பாடமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. அவ்வருஷம் சர்வகலாசங்கத்தார் பதிப்பித்த புத்தகத்தில் யான் தவறென்று காட்டியபடியே அச்சிடப்பட்டுள்ளது. அதற் குரைகூறப்புகுந்த பெரியோரும் உண்மைப்பாடங்கண்டு நிறுவினரல்லர். இவ்விருபுத்தகங்களும், பிழையுடன்பதிக்கப்பட்ட வேறுசிலபிரதிகளுமே யான் அத்திருத்தத்தை வெளியிடுங்காலத்து என்கையிலிருந்தன. ஆதலால் அப்பிழை திருத்தப்படவேண்டுமென்று கருதி யானெழுதலாயினேன்; ஆயினும் இதனை முதன்முதற்கண்டு வெளியிட்ட பெருந்தகையாளர்க்கே யானெழுதிய அத்திருத்தம் உரித்தாகுமென்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*T. N.* அப்பனையங்கார்,

மதுரை.

# காக்கைபாடினியர்.



காக்கைபாடினியனார் எனவும் வழங்குகின்ற இப்பெயர்கொண்டோர் பலர். சிலர்க்கு அடையும் தொடையும் கொடுத்து வழங்குவதும் உண்டு. அங்ஙனம் வழங்குமுறையில் ஈண்டு ஆராய்ச்சிக்குக் கொள்ளப்பட்டவர், (தலைச்சங்க ?) இடைச்சங்ககாலத்தவராய்த் தொல்காப்பியனாரொடு ஒரு சாலைமாணாக்கராகி [தொல்-செய்-க-நச் உரை] ஆசிரியர் அகத்தியனார்பாற் கல்விபயின்ற பன்னிருவருள் ஒருவராகியுள்ளார். இவரது கலையின் பெருமை "நல்யாப்புக்கற்றோர்மதிக்கும் கலைக்காக்கைபாடினியர்" [யாப்-கல-எழுத்-க-விருத்தியுரை] எனவும் "காக்கைபாடினியர் முதலிய மாப்பெரும்புலவர்" [ஷை ஷை தளை-சு-ஷை] எனவும் உரையாளர் பாராட்டுமாற்றான் நன்கு விளங்கும்.

இவரைப்பற்றி உரையாசிரியருளொருவராகிய ஆறைப்போயிலான் என்பார் கூறுமாற்றால் இவரது உயரியசெயலுள் ஒன்று அறியலாகும். அது வருமாறு:- "கொள்வோன் மனனுணர்வின்றி மறைமொழிபயன் கொடாதென்பது; அற்றேல் தொல்காப்பிய காக்கைபாடினியர் ஒருவன் தாழவும் வாழவும் முறையே கூறினாராலெனின் அவை அவர் மறைக்கூற்றான் வந்தவல்ல. அன்னோர்சொல் பழுதாகாநிலைமையுடைமையின் நேர்ந்தவை என்க." [ஊசிமுறி சு-உரை].

இதனால், காக்கைபாடினியர், கொள்வோன்மனனுணர்வின்றி யுரைத்த மறைமொழி ஒருவன் வாழ்வதற்குப் பயன்பட்டது என்பதும், அஃது அவர் மறைக்கூற்றான் வந்ததன்று என்பதும், அவர் தஞ் சொற் பழுதாகாத உயரிய தபோநிலையையுடையவர் என்பதும் பிறவும் புலனாம். தொல்காப்பிய காக்கைபாடினியர் என உம்மைத்தொகையாக இணைத்துரைத்தமையொடு, அத்தொல்காப்பியர்காலத்து நிகழ்ந்த செய்தியொன்றையும் ஒட்டியுரைப்பதால், 'தொல்காப்பியனாரொடு கல்வி பயின்ற ஒருசாலைமாணாக்கரே ஈண்டுக்குறித்த காக்கைபாடினியரென்பது வெளிப்படையாம்.

இனித் தொல்காப்பியரானவர், தம்மாசிரியர் பத்தினி குமரியாரை வடபுலமிருந்து தென்புலத்திற்கு உடனழைத்துவருமாறு இட்டகட்டளையைத் தாங்கி, அழைத்துப்போந்தார் என்பதும், வருமாற்றில் வையையாற்றின் நீர்ப்பெருக்குக் குமரியாரைக் கடிதீர்ப்ப "முன்னாகப் பின்னாக நாற்கோல் நீள அகலம் நின்று*கொண்டு வருக" [தொல்-பாயிரச்] என்ற ஆசிரியன்கட்டளை கடந்து "சென்று ஓர்வெதிர்ங்கோலை முறித்து நீட்டி"க் குமரியாரைக் கரையேற்றிக்கொணர்ந்து தம்மாசிரியர் பக்கல் விடுத்து, நிகழ்ந்தவாற்றினைப் பட்டவாறே மொழிந்தனர் என்பதும், அது பொறாது ஆசிரியர் முனிந்து "நீயிர் சொர்க்கம்புகாப்பிர்" எனச் சபித்தனர் என்பதும், "யாங்கள் ஒருகுற்றமுஞ் செய்யாதிருக்க எங்களைச் சபித்தமையின் எம்பெருமானும் சொர்க்கம் புகாப்பிர் என அவர் அகத்தியனாரைச் சபித்தார்" [ஷை-ஷை-ஷை] என்பதும் பிறவும் நச்சினார்க்கினியத்தால் யாவரும் நன்கறிவர். இந்நிகழ்ச்சியும் இதன் முதிர்வும் பிறவும் சிறுகுரீஇயுறை என்ற நூலுள்ளும் பாக்கப் பிறிதோராற்றான் மொழியப்படுகின்றன.

இவையுண்மையெனின் முன்னர்க்காட்டிய ஆறைப்போயிலான் என்பார் கட்டுரையிற் காணும் ஒருவன் வாழக்கூறியமொழி இச்செயலின் முதிர்ச்சியைக் காட்டும் தொடர் என்பது உய்த்துணரப்படும். அது வருமாறு—

"இவ்வாறு இருபுறத்தோரும் வரம்பிறந்து முனிந்துமொழிந்த பெருமொழியுள், தொல்காப்பியனார்மொழி பிழையாவண்ணம், அகத்தியனார் சொர்க்கம்புகாதநிலை நேர்ந்தமைக்கு ஈடாகத் தவத்தான் மனந்தூயராய்ப் பெருநிலைபெற்றுயர்ந்த சிலர் இயற்றியநூல் என்றும் நின்றுநிலவல் மாபெனினும் அது விலக்க, மற் றவரியற்றியநூல் (அகத்தியம்) உலகில் நின்றுநிலவாது அழியுமாறுபண்ணி, அவர் பொன்னுலகில் என்றென்றும் நிலையாக உறையாவிடினும் அப்பொன்னுலகிற்கு இறைவர்பதப்பெறுநிகழ்வுழி ஆண்டுச்சென்று அன்னவர்க்கு முடிசூட்டுக் குந்தி பெற்றியருள் ஒருவராக என மறுசாபம் அளித்த" [சிறுகுரீஇயுறை-கெட்டகாதை-137-உரை] னர் காக்கைபாடினியர் என்பது.

இதனால் இவ்வாசிரியர் தம்மாசிரியர் அகத்தியனாரை வாழ்வித்த அரும்பெருஞ்செயல் தெற்றெனவிளங்கும். நிற்க.

---

*"நாற்கோல் நீளம் அகலநின்று" என்றிக்கவேண்டும். பத்திராதிபர்,

பன்னிருபடலம் என்னும் புறத்திணை நூலுள் இவர் இயற்றியபகுதி யும் உண்டென்ப. யாப்பினைக் காலஇயைபிற் கேற்குமாற்றான் முதனூலி னின்றும் விரித்தோதிய ஆசிரியர் தொல்காப்பியனார்போலாது இவர் அதனைத் தொகுத்துரைத்தனரென்பர் யாப்பருங்கலவிருத்தியுரையா சிரியர்.

"தொல்காப் பியப்புலவோர் தோன்ற விரித்துரைத்தார்
பல்காய னார்பகுத்துப் பன்னினார்—நல்யாப்புக்
கற்றோர் மதிக்குங் கலைக்காக்கை பாடினியர்
சொற்றார்தந் நூலுட் டொகுத்து"

[யா-கல-எழுத்-க-விருத்தியுரை](வீரசோ-அலங்-10.பெருந்-உரைமே)

இவ்வாசிரியர் இயற்றிய யாப்பிலக்கண நூல் ஆக்கியோராகிய இவர் தம்பெயரால்—"காக்கைபாடினியம்" எனப் பெயருற்று வழங்கலாகும்.

அந்நூல் காலவயப்பட்டு ஒழிந்தது எனினும் பலரானும் நன்கு மதிக்கப்பட்டுள்ளமையின் அதன் நூற்பாக்கள்பல உரையாசிரியர் பல ரானும் தம் உரைமேற்கோளாக ஆண்டாண்டுப் பரக்க எடுத்தாளப்பட் டுள்ளன. அவற்றினின்றும் முதலிறுதிகாணவொண்ணாத இந்நிலை யினும் இவ்வாசிரியரின்மதங்கள் சில அறியப்படுகின்றன.

அத்துடன் உரையாசிரியர்கள் ஒரோவழி இவ்வாசிரியரைப்பற்றி எழுதியுள்ள குறிப்புக்களும், இவரதுகோளைப் புலனாக்குகின்றன. அவை யாவன.

தொல்காப்பியமுடையாரையொப்ப இவ்வாசிரியரும் தளையினை யாப்புக்கு ஒருறுப்பாகவேண்டாதவர் என்ப. இதனைத் "தொல்காப்பியனா ரொடு ஒருசாலைமாணாக்கராகிய காக்கைபாடினியரும் உறுப்பென்னார்" என்ற நச்சினார்க்கினியர் [தொல்-செய்-க] உரையான் அறிக.

தொல்காப்பியனார் அசையினை நேர்-நிரை-நேர்பு-நிரைபு என வகைப் படுத்துக்கொண்டனர். நாலசைப்பொதுச்சீர் வேண்டிலர். இவ்வாசிரிய ரோ நேர்-நிரை-என இருவகைப்படுத்தி நாலசைப்பொதுச்சீர் வேண்டிக் கொண்டனர் [யாப்-கல-சீரோ-க-விருத்தியுரை].

இவ்வாசிரியர்மதமே பின்னூலாசிரியராகிய யாப்பருங்கலமுடையார்க்கு ஒருவழியாயிற்று.

நேரசையினைத் தனியசை எனவும், நிரையசையினை இணையசையெனவும் பெயரிட்டாண்டனர் இவ்வாசிரியர். இதனை,

"தனியசையென்றுவிணையசையென்று
விரண்டெனமொழிமனாரியல்புணர்ந்தோரே"
[யாப்-கலம்-அசை-க-விருத்தியுரை-மேற்கோள்]

என்றதுகொண் டறிக.

தொல்காப்பியனார் அசைக்குறுப்பாக எழுத்துவகையினைப் பதினைந்தாகக்கொண்டமை பேராசிரியர் [தொல்-செய்-உ] உரையாற் புலனாம். இவ்வாசிரியர் (அசைக்குறுப்பாக) எழுத்துவகையினைப் பதின்மூன்றாகக் கொண்டனர். இதனைக்,

"குறினெடி லளபெடை யுயிருறுப் புயிர்மெய்
வலிய மெலிய விடைமையொ டாய்தம்
இஉ ஐயென மூன்றன் குறுக்கமொ
டப்பதின் மூன்று மசைக்குறுப் பாகும்"

[யாப்-கலம்-எழுத்-க-விருத்தியுரைமேற்கோள்] என்றதனால் அறிக. இன்னும்,

"இயற்சி செல்லா மாசிரிய வுரிச்சீர்"
[ஷை-ஷை-சீரோ-உ-ஷை-ஷை] என்றவரும் இவரே.

பாவிற்கு இனம்வேண்டிக்கொண்டவருள் இவரும் ஒருவர்.* இவர் கொண்டமுறை விருத்தம்-துறை-தாழிசை என்பது. இது,

"வெண்பா விருத்தந் துறையொடு தாழிசை
யென்றிம் முறையி னெண்ணிய மும்மையுந்
தத்தம் பெயராற் றழுவும் பெயரே"

---

* பாவிற்கு இனம்வேண்டாத வினையர் வகுத்தாளும் விருத்தம்-துறை-தாழிசையினைக் கொச்சகத்தின்பாற்படுத்திக்கோடலன்றிப் "பாவினங்கோடல் ஆசிரியர் தொல்காப்பியனார்கருத்தன்று" என்றல் பேராசிரியர் நச்சினார்க்கினியர் கோள். ஆசிரியர் இளம்பூரணவடிகள்கருத்து வேறு.

[௬-௬ செய்-2-௬ ௬] என்றதனல் அறியலாகும். இனி, தொல்காப்பியனுர் வண்ணகஒத்தாழிசைக்கலியானது தரவு-தாழிசை-எண்-வாரம் என்ற நான்குறுப்புடன்வருமென்ருர். "வண்ணித்துப் புகழ்தலின் வண்ணமெனப்படும்" "தாழிசையானே வண்ணித்துப்புகழ் தலின் அப்பெயர்பெற்றது" என்பர் பேராசிரியர்.

இவ்வாசிரியரோ—"அச்சொலப் பட்ட வுறுப்போ டாரகவடி—வைத்த நடையது வண்ணக மாகும்" [௬-௬-செய்-31-௬ ௬] என்று அராகம் உறுப்பாகவைத்துக்கூறினுர்*. இவர் கூற்றினைப்பேராசிரியர் தம் முரையகத்தே மறுத் துரையாடியுள்ளார். அது வருமாறு:—

"இனி, வண்ணகம் என்பது அராகம் என உரைத்து அவ்வுறுப் புடையன வண்ணகஒத்தாழிசை எனவும் சொல்லுவாருமுளர். எல்லா ஆசிரியருஞ் செய்த வழிநூற்கு இது [தொல்காப்பியம்] முதனூலாதலின் இவரொடு [தொல்காப்பியனுரொடு] மாறுபடுதல் மரபன்றென மறுக்க" [தொல்-செய்-௱௪௰-பேரா-உரை] என்பது.

இவர் தமிழ்கூறுநல்லுலகத்திற்குவரம்பு "வடக்குந் தெற்குங் குணக்குங் குடக்கும்-வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்-றிந்நான் கெல்லை யகவயிற் கிடந்த-நூல்" [தொல்-செய்-க-பேரா-உரை-மேற்கோள்] என ஆசிரியர் பனம்பாரனுர்செப்பியவாறே செப்பினுர்.

இவர்காலம் தொல்காப்பியர்காலமே. அவ்வாராய்ச்சியினைப் பார்க்க.

---

பெயர்விழையான்,

தச்சநல்லூர்.

---

* பின்னூலாசிரியராகிய அமிர்தசாகரனுர் "அவற்ரொடு முடுகிய லடியுடை யாக-மடுப்பது வண்ணக வொத்தா ழிசைக்கலி" என்றதும் இவ்வாசிரியர்மதம் பற்றியேயாம்.

# * இளங்காக்கைபாடினியர்.



இவர், தொல்காப்பியனாரோடு ஒருசாலைமாணாக்கராகிய காக்கைபாடினியர்க்கு இளையவர். ஆசிரியர் தொல்காப்பியனார்மதங்களுட் பல இவர்க்கு ஏற்புடைத்தாகும். இனி ஒருசாரார் சிறுகாக்கைபாடினியர் எனப்படுபவர் இவர்தாமோ என ஐயுறவுகொண்டுள்ளார். இவர்வேறு, சிறுகாக்கைபாடினியர் வேறு. இவ்வாசிரியர்கோளுக்குமாறாக, யாப்பில் தளை என்பதோருறுப்புத் தனிப்படவேண்டியவர் மற்றவராவர். இவர் தமிழ்கூறுநல்லுலகத்திற்குத் தெற்கெல்லையாகக் குமரியாறு உள்ளகாலத்துத் தோற்றமுற்று நிலவியவர். மற்றவர் குமரிப் பௌவம் தென்னெல்லையாகியகாலத்து எழுந்து சிறுகாக்கைபாடினியம் என்ற யாப்புநூல் ஒன்று யாத்தவராவர். இப்பொருளுரைபற்றிப் பேராசிரியர் கூறுவது ஈண்டைக்கு வருமாறு:—"இனைநூன் முடிபு தன்னூன் மேற்றே"—என்பதனாற் காக்கைபாடினியர் ஓதிய தளையிலக்கணம் ஈண்டும் கோடல்வேண்டுமெனின், அஃதே கருத்தாயின் இவர் (தொல்காப்பியனார்)க்கும் அவர் முடிபேபற்றித் தளை தளையல்வேண்டும். அல்லதூஉம் அவர்க்கு இளையரான காக்கைபாடினியர் தளைகொண்டிலர் என்பது இதனாற் பெற்றாம். தளைவேண்டினார் பிற்காலத்தோராசிரியர் என்பது. என்னை?

> 'வடக்குந் தெற்குங் குணக்குங் குடக்கும்
> வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென்
> றிந்நான் கெல்லை யகவயிற் கிடந்த
> நூலதி னுண்மை வாலிதின் விரிப்பின்'

எனக் கூறி 'வடவேங்கடந் தென்குமரி' எனப் பனம்பாரனார் கூறியவாற்றானே எல்லைகொண்டார் காக்கைபாடினியர். ஒழிந்த காக்கைபாடினியத்து—

---

* இவ்வாராய்ச்சி 'சங்கப்புலவர் வரலாறு' (Tamil men of Letters) என்றநூலின் பகுதி. இவ்வாராய்ச்சியிற்காணுங் குற்றங்களை அவ்வப்போது திருத்தியளிக்குமாறு அறிஞர்களைவேண்டுகிறேன்.

'வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு கரைபொருது கிடந்த
நாட்டியல் வழக்கம் நான்மையின் கடைக்கண்
யாப்பின திலக்கண மறைகுவன் முறையே'

எனத் தென்றிசையுங் கடலெல்லையாகக் கூறப்பட்டதாகலான் அவர் குமரியாறுள்ளகாலத்தாரல்லர் என்பதூஉம், குறும்பனைநாடு அவர்க்கு நீக்கல்வேண்டுவது அன்றென்பதூஉம் பெற்றும். பெறவே அவர் இவரோடு (தொல்காப்பியனுர்) ஒருசாலைமாணுக்கரல்லர் என்பது எல் லார்க்கும் உணரல்வேண்டு மென்பது" [தொல்கா. செய்யு 1. பேரா-உரை] என்பது.

மேற்காட்டிய இதனுள் 'ஒழிந்த காக்கைபாடினியம்'யாது என்று ஆராய்வுழிப் பிறிதோரிடத்து இவ்வுரையாசிரியரே "வடதிசைமருங் கின்" என்ற இந்நூற்பாவையே எடுத்தோதி "தெற்குக் குமரியன்றிக் கடல் எல்லையாகியகாலத்துச் சிறுகாக்கைபாடினியர் செய்தநூல்"— [ஷை-மரபி 95-ஷை-ஷை] என்று கட்டுரைக்கு முகத்தான் இது சிறுகாக் கைபாடினியர் செய்த சிறுகாக்கைபாடினியம் எனத் தெற்றென விளங்கும்.

விளங்கவே ஆசிரியர் தொல்காப்பியனுரொடு ஒருசாலைமாணுக்க ராகிய காக்கைபாடினியர் ஒருவர்,* அவர்க்கு இளையராகிய இளங்காக்கை பாடினியர் இரண்டாமவர், சிறுகாக்கைபாடினியர் மூன்றுமவர் என்ப

---

* காக்கைபாடினியரும், சிறுகாக்கைபாடினியரும் தளையினை ஒருறுப்பாகக் கொண்டு தளைவகைப்படுத்துமாறு பின்வருவனவற்ருற் காண்க:—

(a) 1. "இயற்சீ ரிரண்டு தலைப்பெய றம்முள்
விகற்ப வகையது வெண்டளை யாகும்".

2. "உரிச்சீ ரதனு ளுரைத்ததை யன்றிக்
கலக்குந் தளையெனக் கண்டிசி னேரே".

3. "இயற்சீ ரிரண்டு தலைப்பெய றம்முள்
விகற்ப மிலவாய் விரவி நடப்பின்
அதற்பெய ராசிரி யத்தளை யாகும்."

என்ருர் காக்கைபாடினியர்.

தும் அன்னோர்மதமும் பிறவும் புலனாகும். இம்மூவரேயன்றிப் பிற்காலத்தில் தோன்றிய இடைக்காடனார்க்கு இளையராகிய காக்கைபாடினியார் என்பார் ஒருவரும், காக்கையின் குரலைப் பாராட்டிக்கூறியதன்காரணமாகக் காக்கைபாடினி என்ற அடைபெற்ற நச்செள்ளையார் என்பார் மற்றொருவருமாக எண்ணத்தில் வேறுபட்ட இருவர் இன்னும் உளராவர். பின்னர்க் காண்க.

இனி இவ்விளங்காக்கைபாடினியார் செய்த நூல் ஒன்று உண்டு என்பது மேற் பேராசிரியர் கூறிய கட்டுரையுள் "அவர்க்கு இளையரான காக்கைபாடினியார் தலைகோண்டிலர்"—என்றதில், இவர் மதம் ஒன்று புலனாவதால் அதினின்றும் ஊகித்தறியக்கிடக்கின்றது. அந்நூலின்பெயர் இளங்காக்கைபாடினியம் என்றிருக்கலாமென்று ஊகிப்பாரும் உளர்.

இவ்வாசிரியரின்காலம்—தொல்காப்பியனார் [கால] ஆராய்ச்சியினை நோக்கியறிக.

---

பெயர்விழையான்,
தச்சநல்லூர்.

---

(b) 1. "இயற்சீ ரொன்று நிலையது வெண்டளை
யுரிச்சீ ரதனி லொன்றுத லியல்பே".

2. "ஈரசை யியற்சீ ரொன்றிய நிலைமை
யாசிரிய யத்தளை யாகு மென்ப".

3. "வெண்சீ ரிறுதி நிரைவரிற் கலித்தளை
வஞ்சி வகைமை வரைவின் றாகும்".

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

[யாப்பருங்கலம்-தளையோத்து-௩-சூத்திரவிருத்தி-மேற்கோள்].

மதுரைத்தமிழ்ச்சங்கத்தார்

**1921-ம்ஙூ மார்ச்சுமீ 5உ நடத்திய**

# ஆங்கிலத் தமிழ்ப்பரீக்ஷை வினா.

ஸ்கூல்பைனல் வகுப்பு.

## 2 இலக்கணம்.

பரீக்ஷகர்:--ரெ. இராமையங்கார்.

1921-ஙூ மார்ச்சுமீ 5உ சனிக்கிழமை பகல் 2—4

[அம்சம் 90]

நன்னூல்.

1. நன்னூலைப்பற்றியும் அதன் ஆசிரியரைப்பற்றியும் தெரிந்த வற்றை யெழுதுக.
2. நன்னூலின் எழுத்திலக்கணம் எத்தனை பாகுபா டுடைத்து?
3. முதலெழுத்துக்களும் சார்பெழுத்துக்களு மெவை?
4. உயிரளபெடை, ஒற்றளபெடை, குற்றியலுகரம், குற்றிய லிகரம் இவற்றிற் கிலக்கணங்கூறி உதாரணந் தருக.
5. மாத்திரையென்று லென்ன? எவ்வெவ்வெழுத்துக்கள் எவ்வெவ்வளவு மாத்திரை பெறும்?
6. மொழிக்குமுதலாமெழுத்துக்களும், ஈறாமெழுத்துக் களும் எவை? மெய்களுள் எவ்வெவை எவ்வெவ்வுயிரோடு முதலாம்?
7. காலங்காட்டும் இடைநிலைகளும் விகுதிகளு மெவை?
8. ஆரியச்சிறப்பெழுத்துத் தமிழில் எங்ஙனந் திரிந்துவரும்? லகர ரகர யகரங்களை முதலிலுடைய ஆரியச்சொற்கள் தமிழில் எங்ஙனம் வரும்?
9. தமிழிற்கேயுரிய சிறப்பெழுத்துக்கள் எவை?
10. உடம்படுமெய்யென்று லென்ன? எவ்வெவை எவ்வெவ் விடத்து உடம்படுமெய்யாம்?
11. எகரவினாமுன்னும் சுட்டின்முன்னும் நாற்கணமும் எங் ஙனம் புணரும்?
12. கீழ்வருந்தொடர்களில் எவையேனும் பன்னிரண்டிற்குப் (பிரித்துப்) புணர்ச்சிவிதி கூறுக. (1) களங்கனி (2) ஆற் றுநீர் (3) காட்டாண் (4) மருத்துப்பை (5) பண்டைக்

காலம் (6) கீழ்த்திசை (7) ஈராயிரம் (8) பனம்பழம் (9) கட்சாடி (10) மட்பானை (11) பொற்றாலி (12) கொற்சேரி (13) தற்கொலை (14) வேய்ங்குழல் (15) அஃறிணை (16) கன்னன்று (17) கட்டீது.

13. வவ்விறுசுட்டு, குறில்வழிலள, குறிலணைவில்லாணைக்கள், ஆமுன் பகாவீ, குறியதன்கீழா இவை யெவை?

14. குறிப்பிற் பொருள்தருமொழிக ளெவை?

15. ஆகுபெயர்க் கிலக்கணங்கூறி அதன்வகை ஒவ்வொன்றற்கும் ஒவ்வோருதாரணந் தந்து விளக்குக.

16. எட்டு வேற்றுமைகட்கும் உருபும் பொருளும் முடிக்குஞ் சொல்லு மெவை?

17. பெயரெச்ச வினையெச்சங்கள், அறுவகைத்தொகைகள் இவற்றிற் கிலக்கணங்கூறி உதாரணந் தருக.

18. அறுவகைவினாக்களும் எண்வகைவிடைகளு மெவை?

19. ஒருவரென்பது உயரிருபாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.

இனைத்தென் றறிபொருள் உலகி னிலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்.

இவ்விரு சூத்திரங்கட்கும் உரைகூறி உதாரணந் தருக.

20. ஏகார ஓகார இடைச்சொற்களின்பொருள்க ளெவை?

---

## 3 வியாசம்

பரீக்ஷகர்:—ம. கோபாலகிருஷ்ணையர்.

1921-ௗ மார்ச்சுமீ 5உ சனிக்கிழமை பிற்பகல் 4½–5½

[அம்சம் 30.]

I. (a) அன்பு தன்னையங்கருதாத்தன்மையால் எழுவதைக் குமுதவல்லி அமுதவல்லி இவர்களின் செய்கைகளைக்கொண்டு விளக்குக. அல்லது

(b) இருளனது கைம்மாறுவேண்டாக் கடப்பாட்டையேனும், கருப்பணனது குணநிசபங்களைப்பற்றியேனும் எழுதுக.

II. (a) "தோஷ்ணரிலைக்கேற்ப மனிதரியல்பு மாறுபடும்"

அல்லது

(b) "தேச வழியம்" என்பதைப்பற்றி ஓர் வியாசம் எழுதுக,

---

ஸ்ரீ

# விவாகரகஸியம்.

(உஎச-ஆம் பக்கத் தொடர்ச்சி.)



கா:-விவாகத்தில் பாணிக்கிரஹணம் நடந்தபிறகு என்ன செய்கிறார்கள்.

ச:- பிறகு மணமகன், மணமகளை வலதுகாலைத்தூக்கிவைத்துக் கிழக்கு முகமாகவாவது வடக்கு முகமாகவாவது ஏழடி நடக்கும்படிசெய்து, ஒவ்வொரு அடியும் வைக்கும்போது அவளுடைய வலதுகாலைப் பிடித்துக்கொண்டு, 'விஷ்ணுதேவதை உன்னுடன் தொடர்ந்து வந்து பாதுகாத்துப் பலத்தைக் கொடுக்கட்டும்' என்ற பொருளுடன் தொடங்குகிற ஏழுமந்திரங்களையும் ஜெபிக்கவேண்டும்.

கா:-எதற்காக ஏழடி நடக்கவேண்டும்?

ச:- அம்மா! 'ஏழடி கூடநடந்தால் பெரியோர்களுக்கு மனதில் நட்புண்டாகும்' என்று சொல்லக்கேட்டிருக்கிறோம். வடமொழிநிகண்டுகளில் 'ஏழடிநடக்குந் தன்மை' என்ற பொருள்படும் 'ஸாப்தபதீநம்' என்னும் பதத்துக்கு ஸக்யம் என்ற பர்யாயபதம் கூறுகிறார்கள். ஏழாவதடி வைக்கும்போது ஜெபிக்கப்படுகிற மந்திரம்,ஏழடிநடந்துவிட்டபடியால் நீ எனக்கு உயிர்த்தோழியாகிறாய்' என்று பொருள் படுகிறது.

கா:-தோழி! ஏழடிநடக்கவேண்டும் என்றமுறையின் உட்கருத்து எனக்கு நன்கு விளங்கவில்லை.

ச:- (சிறிது ஆலோசித்து) இதற்கு, இந்தப்பூமியிலிருந்து புவர்லோக முதலிய மேலேழுலகங்களிலும் நாமிருவரும் இணைபிரியாமற் சேர்ந்து சஞ்சரிக்கும்படி தேவர்கள் ஆசீர்வதிக்கட்டும் என்ற கருத்தும் இருக்கலாம்.

கா:-முனிவர்களின் அபிப்ராயம் நன்றாய் யோசித்தால் விளங்கும்.

ச:- அதன்பிறகு தம்பதிகளிருவரும் அக்கினியை வலம்வந்து முன்கூறியபடி விரித்துள்ள பாயில் உட்காரவேண்டும். பின் மணமகள் தன்னை

விடாது தொட்டுக்கொண்டிருக்க மணமகன் 'ஜனனரகலியத்தை யறிந்த ஸோமதேவதைக்கு இந்த ஆகுதி' என்று தொடங்குகிற பதினாறு மந்திரங்களைச்சொல்லி நெய்யினால் அக்கினியில் ஆகுதி செய்யவேண்டும்.

கா:–ஸப்தபதிக்குப்பிறகு ஹோமம் முதலான எல்லாச் சடங்குகளிலும் மணமகள் மணமகனை விடாது தொட்டுக்கொண்டிருக்கவேண்டு மென்கிறவிதி அவளுக்கு வழங்கும் தர்மபத்தினி என்னும் பெய ருக்குப் பொருத்தமாயிருக்கிறது.

ச:– பிறகு அவளை, மணமகன் அக்கினிக்கு வடபக்கமாக வலதுகாலடி வைத்து நடக்கும்படி செய்து, 'இந்தக்கல்லில் இரு, கல்லைப்போற் சலிக்காத மனநிலையுடையையாகுக' என்று பொருள்படுகிற மந்திரத் தைச் செபித்துக்கொண்டு கல்லில் உட்காரச் செய்யவேண்டும்.

கா:–இதற்காகவா அம்மிக்கல்லைக் கொணர்ந்து வைக்கிறார்கள்? இந்தமுறை யை ஆராயும்பொழுது தன் கிருஹ அரசாட்சியில் இவளை அக்கினி சாக்ஷிகமாக அபிஷேகஞ்செய்து வீற்றிருக்கும்படி செய்யவேண்டிய தென்பது கருத்து என்று தோன்றுகிறது. நம்தேசத்திலும் ஸ்காட்லாந்து முதலிய ஐரோப்பியதேசங்களிலும் பூர்விக அரசர்கள் ஒருகல்லில் உட்கார்ந்து முடிசூட்டிக்கொண்டதாகச் சரித்திரங்கள் படித்திருக்கிறேன்.

ச:– பிறகுமணமகன் மணமகளுடைய இரண்டு அகங்கைகளையும்சேர்த்து விரித்து அதில் இரண்டு முறை பொரிகளை எடுத்து நிரப்பி அதன்மேற் சிறிது நெய்தெளித்து, 'இந்தப்பெண்ணே இந்த ஹோ மம் செய்கிறாள்' என்று தொடங்குகிற மந்திரத்தைச்சொல்லி அக் கினியில் அந்தப் பொரியை ஹோமம் செய்விக்கவேண்டும்.

கா:–(சிறிது ஆலோசித்தவள்போல் நடித்து) மணப்பெண்ணின் உடன் பிறந்தவனல்லவோ அக்கினியிற் பொரியிட்டு ஹோமம் செய்ய வேண்டும்?

ச:– அப்படியும் சிலமஹரிஷிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். இப்படி மழுடிவைத்தல், கல்லில்வீற்றிருத்தல், பொரிஹோமஞ்செய்தல் இம் மூன்றும் தனித்தனி மூன்றுதடவை செய்யப்படவேண்டும்.

கா:—இதன் கருத் தென்ன?

ச:— மணமகளைக் கல்லில் உட்காரவைப்பதால் மணமகன் மணமகளை நோக்கி "உன்னுடைய மனநிலையானது என்னிடம் கற்போல் ஸ்திரமாயிருக்கவேண்டும், உன் மனநிலையைக் கலக்க மற்றவர்கள் எவ்வளவு உபாயம்செய்தாலும் அவைகளைக் கவனியாது தள்ளிவிட வேண்டும்" என்று அவளை மூன்றுமுறை சபதம்செய்விப்பதாகவும், பொரியோமத்தால் கணவனுக்கு நீண்டவாழ்நாள் அளிக்க வேண்டுமென்று மணமகள் அக்கினியை மூன்றுமுறை பிரார்த்திப்பதாகவும், அக்கினியை மூன்றுமுறை பிரதக்ஷிணம்செய்வதனால் இருவருக்கும் சரீரகாந்தி, பலம், புத்தி முதலியன விர்த்தியாக வேண்டுமென்றும் நல்லசந்தானமும் சம்பத்துக்களும் உண்டாகும்படி அருள்புரிய வேண்டுமென்றும் அக்கினியைப் பலமுறை பிரார்த்திப்பதாகவும் பொருள்படுகிறது.

கா:—நன்று நன்று; ரகுமஹாராஜன் திக்குவிஜயஞ்செய்யப்புறப்பட்ட பொழுது 'அவனுக்கு ஆயுள்விருத்தியாகவேண்டுமென்று நன்றாய் வாழ்கின்ற வயதுசென்ற மங்கையர்கள் பொரியிட்டுவாழ்த்தினார்கள்' என்று காளிதாசர் கூறியிருக்கிறார்.

ச:— பிறகு ஜயாதிஹோமங்களைச்செய்துவிட்டு மணமகன் மணமகளின் இடுப்பிற் கட்டிய தருப்பைப்புரியை அவிழ்த்துவிட்டு அவளை யானையின்பேரிலாவது குதிரையின்பேரிலாவது ஏற்றிக் கூட்டிக் கொண்டுபோகவேண்டும். பல்லக்கிலும் அழைத்துச்செல்லலாம்.

கா:—ஜயாதிஹோமமென்றாலென்ன?

ச:— இது, அதுவரைசெய்யப்பட்ட சடங்குகள் சபலமாகவேண்டுமென்கிற கருத்துடன் முடிவாய்ச்செய்யப்படுகிற ஓமமாகும்.

கா:—இதனுடன் விவாகச்சடங்குகள் முடிந்துவிட்டனவென்று நினைக்கிறேன்,

ச:— இன்னுங் கொஞ்சமிருக்கிறது. விவாகச்சடங்கின்பொருட்டு உண்டாக்கிய அக்கினியை அவியாமல் ஜாக்கிரதைபாயெடுத்துக்கொண்டு மணமகளை மணமகன் தன்வீட்டிற்கழைத்துக்கொண்டுபோய்ப் பிரவேசஹோமம்செய்தபிறகு விவாகச்சடங்கு முடிவுபெறுகிறது.

கா:-இந்த அக்கினியைத்தான் அவியாமல் வீட்டில்வைத்து வாழ்நாள் முழுதும் பூஜிக்கவேண்டுமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்களோ?

ச:- ஆம். இந்த அக்கினியானது நடுவில் அவிந்துபோய்விட்டால் இதன் சாம்பலை அரணிக்கட்டையிற் பூசி அதைக்கடைந்து அக்கினி யெடுக்கவேண்டும்; அல்லது வேதமோதி நியமந்தவறாமலிருக்கிற சுரோத்திரியனுடைய கிருகத்திலிருந்து கொண்டுவரவேண்டும். அக்கினி அவிந்ததோஷத்துக்காக மணமகனாவது மணமகளாவது ஒருநாள் உபவாசமிருக்கவேண்டும்.

கா:-வாழ்நாண்முழுதும் இந்த அக்கினியையே கிருகத்தில் வைத்துப் பூசிக்கவேண்டுமென்னும் நிர்ப்பந்தமேற்பட்டதற்கு என்னகாரணம்?

ச:- விவாககாலத்திற் சாக்ஷியாகவிருந்த அக்கினியில் தினந்தோறும் காலை மாலைகளில் ஹோமஞ்செய்வது தம்பதிகளுக்கு நன்மையை விளைவிக்கும் என்று கருதியிருக்கலாம்.

கா:-வெகுகாலத்துக்குமுன் நம்முன்னோர்கள் மிகவும்தட்பமான மலைநாடுகளில் இருந்தார்களென்றும், அங்கு, குளிர்ச்சியைத் தணிக்க வேண்டி எப்பொழுதும் வீட்டில் அக்கினியை அவியாமல் வைத்துக்கொள்ளவேண்டிய அவசியமிருந்தமையால் இந்த நிர்ப்பந்தம் ஏற்பட்டதென்றும், பிறகு அவர்கள் காலக்கிரமத்தில் அவ்விடத்திருந்து புறப்பட்டு விதஸ்தா, அஸிக்நி, சுதுத்ரி, சிந்து முதலிய நதிகளைக்கடந்து *ஆரியாவர்த்தத்திற் சிலகாலம்வசித்துப் பிறகு அதிக உஷ்ணமான தென்றேசத்திற் குடியேறியபடியால் இப்பொழுது அந்நிர்ப்பந்தம் அவசியமில்லையென்றும் நவீனசரித்திர ஆராய்ச்சியாளர்களிற் சிலர் சொல்லுகிறார்கள்.

ச:- காந்திமதி! பரலோகமென்று ஒன்று உண்டா? இல்லையா? என்ற ஆராய்ச்சியில் ஆழ்ந்தவர்களாயும், பூமியிலுள்ளசுகங்களையே முக்கியமாய்க்கருதினவர்களாயும், சாருவாகர்களுடைய கொள்கைகளைப் பெரும்பாலும் கைக்கொண்டவர்களாயும் இருக்கிற நவீனநாகரி

---

* இமயமலைக்கும் விந்தியமலைக்கும் இடையிலுள்ளதேசங்களுக்கு ஆரியாவர்த்தமென்று பெயர்.

கர்கள் சொல்லும் யுக்திகள் சிலவிஷயங்களிற் சரியாகத்தோன்றி ஞலும் என்மனதுக்கு இஸிக்கவில்லே. இக்காலத்தில் தர்மம் காமத்தை யனுசரிக்கத் தலைப்பட்டுவிட்டதென்று உன்னுலே சொல்லப்பட்டதல்லவா?

கா:–மேல் நடப்ப தென்ன?

ச:– பிறகு மணமகன், இரதத்தைக் கொண்டுவந்துநிறுத்தி அதில் மந் திரத்துடன் குதிரைகளேயாவது எருதுகளேயாவது பூட்டி மண மகளே ஏற்றிவைக்கவேண்டும். "புருஷன்வீட்டில் வேறுவேறுசுபாவ முள்ள மாமி மாமன், நாத்தி முதலியஜனங்களுக்குநடுவில் முகமறி யாமல் புதியவளாய்ப்பிரவேசிக்கிறவள் எப்படிச் சுகமாயிருக்கக் கூடும்" என்று ஒருசமயம் மணமகளுக்கும் அவளேச்சேர்ந்தவர் களுக்கும் கலக்கமுண்டாகலாம் என்று நினைத்து, மணமகன், மணமகளேநோக்கி "நீ கணவனுடைய தலையில் ஏறுவதாகநினைத் துக்கொள்; நல்லசந்தானத்தைப்பெற்று வீட்டிற்குத் தலைவியாயிரு; மாமி, மாமன், நாத்தி முதலியசுற்றமும் பசுமுதலிய வீட்டிலுள்ள எல்லா ஐசுவரியங்களும் உன்னுடையனவாய்விடும்"என்று பொருள் படுகிற நட்பைக்குறிக்கும் இனியசொற்களடங்கிய மந்திரங்களை உறக்க ஜெபித்து மணமகளுக்கும் அவள்சுற்றத்தார்க்கும் களிப்பை யுண்டாக்கவேண்டும். இந்த நியமம், மந்திரஞ்செய்த மஹரிஷி களுடைய லோகாநுபவத்தை நன்குவிளக்குகிறது.

கா:–ஐயோ! பணம்சம்பாதிப்பதில்மட்டும் அதிகசிரத்யதைவைத்த இக்கா லத்துப் புரோகிதர்கள், விவேகிகள் ஆராய்ந்து மிகவும் சந்தோஷப் படக்கூடிய இந்த விஷயங்களைப் பெரிதும் அறிந்துகொள்ளுகிறூர்க ளில்லேயே என்று விசனிக்கிறேன்.

ச:– இக்காலத்தில் வேதமோதுமந்தணர்களிற் பெரும்பான்மையோர் பொருள்தெரிந்துகொள்ளாமலே அக்ஷரக்கூட்டங்களேமட்டும் அத்தி யயனஞ்செய்து திருப்தியடைந்துவிடுகிறூர்கள்.

கா:–காவியம் பயின்றவர்களும் சாஸ்திரம் படித்தவர்களும் பெரும்பா லும் வேதமோதுவதில், சிரத்தையற்றவர்களாய் வேதத்தின் உட்

கருத்தையறியாமல் மறைபோரென்ற பெயரை மட்டும் வகிக்க விரும்புகிறார்கள். இது காலத்தின் கொடுமையே.

ச:- முன்காலத்தில் அங்கங்களுடன் வேதங்களையும் சாஸ்திரங்களையும் விடாது படித்தவர்கள்தான் பண்டிதர்களென்று சொல்லப்பட்டார்கள். இப்பொழுதோ பழையகல்விப்பயிற்சியின்முறை முழுதும் வேறுபட்டிருக்கிறது. இதைப்பற்றி அதிகம் பேசுவதிற் பயனென்ன?

கா:-தோழி! நன்றாய்ச்சொன்னாய்! "எப்படியாவது பொருள் சம்பாதித்துக் குடும்பத்தைப் பாதுகாப்பது குடும்பத்தலைவனுடைய முக்கியமான கடமை" என்று பொருள்படுகிற ஒரு வேதவாக்கியந்தான் இப்பொழுது எல்லாருக்கும் அனுபவத்தில் வந்திருக்கிறது.

(தொடரும்.)

ர. கிருஷ்ணமாசாரியர் M.A.
வித்யாநிதி.

---

# சிறைவிடந்தாதி.

(௨௬௪-ம்பக்கத் தொடர்ச்சி.)

ஆறாதுயர்கொண்மெழியாதவல்கொண்டமெலமர்ந்தி
பேறுவிரலியாமலுனதன்புபுரிகின்றதெக்காலமோ
வாறுகிலலுறியனலாகிவெளியாகிவனமாகியெங்
கோறுகியருவாகியுயிர்தோறுமுறைகின்றகுமரேசனே. (௬௪)

குமாகுறப்பேதைகொண்காபொருஞ்சூர்க்குலஞ்சாயவென்
றமாமெயில்வீரவென்றென்றிரந்தாலுமருளாய்கொலோ
தமாகியுடனுகியுறவாகியருடந்தைதாயாகிமற்
றெமாகிவிளையாடிவிளையாயறங்கூருமிகல்வேலனே. (௬௫)

வேல்பாய்தடக்கட்பிணைத்தோளவர்க்கன்புவிளைதந்துபுன்
மால்பாயுநெஞ்சத்தெனக்கன்பளித்தாளும்வகைகாண்கிலேன்
பால்பாய்குடச்சூல்விளக்காவிவாவிப்பரப்பெங்கணுஞ்
சேல்பாய்தருந்தண்டலைத்தேவர்தொழநின்றசெந்தூரனே. (௬௬)

தொழுதும்புகழ்ந்துந்துணைத்தண்டையந்தாடொழுந்தோறுநின்
றெழுதும்பிறப்பின்னுமெய்தாதுமுருகேசனருளெய்திலீ
ரொழுகும்பிறப்பின்மையிம்மைக்குமறுமைக்குமொருதென்புலத்
தெழுதண்டமறலிக்குமென்கொண்டொழிப்பீரெடுத்தோதுமே. (௬௭)

ஓதுந்தமிழ்ப்பாடலுணராதபுலையர்க்குரைத்தன்னர்பால்
யாதும்பெறீர்வெள்கியேமாறிவாயாறுமிசைவாணரே
காதுஞ்சினச்சூரடங்கப்பொருஞ்செங்கணமர்பாடிவிப்
போதும்பொருட்பெற்றுமுருகேசனடிபின்புகப்போதுமே. (௬௮)

போதோடுநாடோறுமுருகேசவென்றேபுலம்புற்றவென்
றீதோடும்வழிகண்டுசிறிதேனுமருளாய்கொல்செந்தூரனே
மாதோடும்வடவாலிலைத்துஞ்சிவருமாமனெனநீயுமோர்
வேதாகமச்சாகரத்தோடுவிளையாடிவிழிகூர்தியே. (௬௯)

கூராழிமாயன்பணித்தாமரைக்கோயில்கொள்ளும்பிரா
னீரார்சடைக்கற்றையானாலுமுடியாதுநினைநேர்குவார்
தீராதவினைசெங்கதிர்ப்பட்டபனியென்றுசிதறுங்கொலோ
சீரார்கழற்றண்டைமுருகாவெனக்கென்கொறெளியாததே. (௭௦)

வேறு

தெளிதருமனங்குழையவிழிபுனலரும்பவொருசிரமிருகரங்குவியவே
களியளிமுழங்குமிளமுளரியினிலங்குமிருகழலிணைதினந்தொழவனே
வளிபடுமதம்பொழியுமடுகளிறுநின்றுமுறையலறவெளிவந்தநெடுமா
லுளமகிழ்தருங்கருணைமருகவிமயம்புரியுமுமையவடருங்குமரனே. (௭௧)

குமரகுருபரமுருககுறவர்மடமகளிணையகுவவுமுலையுழுதபுயனே
யமரர்பதிதழையமிடையசுரர்பதியெரியவிடுமழலொழுகுகுலிசமுதல்வா
தமரமிடுதிரையுலகமடையமுடிவெகுளுநிசிசரர்திமிரதினகரகுகா
விமலவறுமுகவரிதன்மருகனெனநினையுமவர்வினைபரிதிதுருவுபனியே. (௭௨)

பணிகொண்டலர்ந்துபரகெதிதந்திலங்குமிருபதபங்கயம்பரவிலார்
தனிநெஞ்சிரங்கியறுமுகனென்றிரந்துமொருதரமன்புவந்துருகிலார்
புனிதன்பெருங்கயிலையிறைவன்பயந்தமுகபுகர்கொண்டதந்தியிளையா
யினியந்தவன்பிறவியொழிகின்றதெந்தவகையெரிகும்பிமண்டுமிவரே. (௭௩)

மண்டமரிடுந்தறுகண்வஞ்சநிருதன்படவழங்கியகொடும்படையினா
லண்டமுமகண்டமுமருங்கதியுமெண்டிசையுமஞ்சலறநின்றதலவோ
பண்டிதசவுந்தரதிகம்பரநிரந்தரபரம்பரமுகுந்தன்மருகா
தெண்டிரைமுகந்துதரளங்களைசொரிந்துதருசெந்திநகரெந்தைபரனே. (௭௪)

எந்தைபானியலாதுயர்ந்தவர்கள்யாவரெவரென்றுனதுநாமமோதுவா
ரார்தருவும்வேறவேறருங்கதியும்வேண்டுமேவருங்கதியலாமல்வாழ்வரோ
கந்தமுருகேசமான்முகுந்தன்மருகாகுகாகடம்பணிபடீரமார்பனே
நந்தலவுவாவிமேவுசெந்திநகராளனேநடம்புரிமயூரவீரனே. (௭௫)

வீரவேலினைப்பொருமயூரவாகனத்தைவிறன்மேயசேவலைப்பரவுவீ
ராரமாலைவெட்சிமலர்சூழ்புயாசலத்தைநமையாள்சரோருகத்தைநினைவீர்
கோரவாளரக்கருடல்சோரியாறெனக்கழுகுகூளிகூடிநட்டமிடவே
போரெலாம்விளைத்துவருவீரவாகுவைத்தொழுதுபூதிபூசிநிற்பதழகே. (௭௬)

வேறு

அழகுசெறிமுகபங்கயத்தொனிமொகுமொகெனவருதண்டையங்கழ
லசலநிரைபொருதிண்புயங்களருள்கூர்
விழிமுனரியபயந்தருங்கரமொருகடவுளிமயம்பயந்தருள்
விமலைமுலையமுதங்கமழ்ந்தகனிவாய்
பொழிகிரணவுதயந்தருங்கதிரொளியொளிருமுருவம்பெருங்கதி
புரிகருணையவனெஞ்சிரங்கநினைவாய்
வழிபிரசமொழுகுங்கடம்பனையொருபொழுதுதொழுதன்புகந்தவர்
மகபதிபொன்மகுடம்புனைந்துறைவரே. (௭௭)

வேறு

உறையிடுவேலும்வாளுமனையகண்ணுனைநாடியொழுகுவிகாரமுடனேன்
மறைமுதலாயவேதனளவறியாதபாதமலர்முடிசூடிவாழ்வனோ
நறைகமழோதியோதியிளமுலைதெய்வயானைநறுநுதலேழைசேர்வனே
யறைகழல்வீரசேவலுயரியதேவதேவவழகுகுலாமயூரனே. (௭௮)

ஊர்தருசிரக்குருட்டமீளைவலிவந்துவெப்பொடாதியவெலும்புருக்கிநோய்
வேர்விழுசிரங்கிசத்திருலைவலிநெஞ்சடைப்புவேதனைதரும்பருக்களோ
யார்தருசிலந்திபித்தகாமிலைநரம்புளுக்கோடாதியபவுத்ரமற்றநோய்
சார்வரவிரங்கிரட்சிறாதவெருண்டசத்திசாடியதடக்கைமுத்தனே. (௭௯)

---

(தொடரும்)

சு. நல்லசிவன்பிள்ளை,
உபாத்தியாயர்,
மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலை, மதுரை.

# திருவாரூர் ஒருதுறைக்கோவை.

கோவை என்பது இன்னதென்பதூஉம், இன்னின்ன உறுப்புக்களையுடையதென்பதூஉம் அறிஞர்பலருமறிந்ததே. ஒருதுறைக்கோவையென்பது அகப்பொருளிலே ஒரு துறையை எடுத்துக்கொண்டு அந்தத் துறையிலே நானூறுபாட்டுப் பாடுதலென்பர் பெரியார். இதற்கு "நாணிக்கண்புதைத்தல்" என்ற துறையில் அமிர்தகவிராயர் பாடிய ஒருதுறைக்கோவையைக் காட்டாகச் சொல்லுவர் பண்டிதரத்தினங்கள்.

அங்ஙனமின்றி வெறிவிலக்கல் என்னுந் துறையில் ஒரு நானூறு செய்யுள் செய்தார், கீழ்வேளூர்க் குருசாமிதேசிகரென்பார். இவர் சென்னை முதலியஇடங்களிற் சிறப்புடன் பன்னாள் வாழ்ந்த கீழ்வேளூர்ச் சுப்பிரமணியதேசிகரின் மூதாதையாவர். சுமார் இருநூறுவருடங்கட்கு முன்னிருந்தவர். இக்கோவையின்பிரதிகள் அருகிவருவதைமுன்னிட்டுக் கல்விச்செல்வம் பொருட்செல்வம் இரண்டும் ஒருங்கேவாய்ந்த பெரியார் யாராவது இதனை வெளியிட முன்வரவேண்டி இதனுடன் அக்கோவையிலுள்ள சில பாடல்களை வெளியிடுகிறேன்.

பூவசஞ்செய்துவிண்ணாடுபுணர்பகைபோக்கியவோர்
கோவசஞ்செய்வளராரூர்த்தியாகர்குவவுத்திண்டோள்
தாவசஞ்செய்யவென்றானீ தராயித்தரணியிடைப்
பாவசம்போகநினைப்பாயனையென்னபாதகமே. (க)

கூனிக்குவேண்டலன்காணாதபாதமென்கோகனக
ஞானிக்ககங்கைநெலியினிற்காட்டநயந்தவர்செங்
தேனிக்குமான்மொழிபாகர்கமலைத்தியாகர்செய்மா
லானிக்கென்றாேவிந்தவாடிக்குமேல்வந்ததாயிழையே. (௩)

[கூனிக்குவேண்டலன்—சிராமன்; ஆனி, ஆடி வரப் பாடியிருப்பது கவனிக்கத்தக்கது.]

விண்ணுக்கொருமருந்தாரூர்த்தியாகரைமேவவந்த
புண்ணுக்கொருமருந்தாவதுகூடல்புரப்பவடன்
கண்ணுக்குவமைபசுபதியென்னக்கழறிவைநாப்
பண்ணுக்கிறுதிபுரிவதென்றியாவர்பகர்ந்ததுவே. (அ)

[*புரப்பவள் தன் கண்ணுக்கு உவமை—உமாதேவியின் திருநயனத் துக்கு உவமை; அதாவது மீனம். பசுபதி—ரிஷபம். இவைநாப்பண்—இவற்றின் மத்தியிலுள்ளது; அது மேஷம்=ஆடு.]

பேரெச்சமாக்கிவினையெச்சநீக்கும்பெரியர்கடாள்
பாரெச்சமேவியபார்த்திபன்வாழ்த்துபதாம்புயத்தை
யீரெச்சம்வாழ்த்துதென்னாரூரர்மார்பகமீவதொளி
யோரெச்சமூர்வதைக்கோறலென்றன்னையுணர்ந்தனளே. (௰௨)

[பார்த்திபன்—முசுகுந்தன். ஈரெச்சம்—பதஞ்சலி, வியாக்ரபாதர். ஓரெச்சம்—அக்கினி.]

உறியடிசெய்தனைநெய்மாந்தினேன்முடியொண்டுளவின்
வெறியடிவீதிதிகழ்கமலாபுரிமேவியுள்ளான்
சிறியடியாகரைச்சேவித்தவளெனச்சிந்தைசெய்யாண்
மறியடியென்னநின்றாளன்னைபென்னைவசனிப்பதே. (௰௪)

[தன்மை, முன்னிலை, படர்க்கைவரப் பாடியது.]

தன்மையிறுதிபறமுன்னிலையும்பர்தானவர்சூழ்
பொன்மையொருவரைவாயமராரைப்பொருதழிக்கும்
வின்மையுறவைத்தவாரூரர்பூம்புயமீதுமிக
வன்மையினெஞ்சம்படர்க்கையென்றாங்கொலிவ்வையகத்தே (௰எ)

பாயசரீபடல்பாதகமாகுமென்பாட்டினுக்கு
மேயசம்பாவனையாவதுகேளன்னைமெல்லியலார்
தூயசங்கீதமுர்தொன்முறைபோசையுந்தோன்றுதொட்டே
யாயசெம்பொன்மதிலாரூரரைச்சென்றணைவதுவே, (௰அ)

பலசட்டிபானையுடைத்தரிவெண்ணெய்பரிந்தயின்று
வலசொற்கவுணியர்பூங்குடமாய்த்தனர்கைதந்தார்
சலசத்தடம்பணையாரூர்மாலைதாரிதற்குக்
கலசத்தினையுடைத்தென்னைகோள்வாய்பயன்காரமயிலே, (௨௫)

இலக்கணவிளக்கபரம்பரை,
திருவாரூர்—சோமசுந்தரதேசிகன்.

---

* கடல்புரப்பவள் எனக்கூட்டிப் பொருள்கொள்ளுதல் பொருத்தமான தென்று தோன்றுகின்றது. கடல்புரப்பவள் மீனாக்ஷியாதலால் அவள் கண் ணுக்குவமை மீனமென்றவாறு. (உதவிப்பத்திராதிபர்)

## 1921-ஞு ஜூலைமீ 4உ (துர்மதிஞு ஆனிமீ 21-உ) காலை 11-மணிக்குக்கூடிய மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் காரியநிர்வாகசபையில் முடிவுசெய்யப்பட்ட தீர்மானங்களின் விவரம்.

1. மாட்சிமைதங்கிய கனம் B. இராஜராஜேஸ்வரஸேதுபதி மன்னரவர்கள், அக்கிராசனாதிபதி.
2. மகா-ா-ா-ஸ்ரீ ராவ்பகதூர் P. சுப்பராயஐயரவர்கள் B.A.,
3. ,, M மாணிக்கவாசகம்பிள்ளையவர்கள் B.A.,B.L.,
4. ,, T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் B.A.,B.L.,M.L.C.,

இவர்கள் வந்திருந்தார்கள்.

### தீர்மானங்கள்.

I. 1921-ஞு ஜூன்மாத வரவு செலவு கணக்குகளை அங்கீகரிக்கலாயிற்று.

II. சங்கத்தின் கட்டடத்தை முன்னையஸ்திதிக்குக் கொண்டு வருவதற்காக நாட்டரசன்கோட்டைநகரத்தார்கள் அடியிற்கண்டபடி பொருளுதவிசெய்வதாக அன்புடன் வாக்களித்துள்ளார்கள்.

(1) மகா-ா-ா-ஸ்ரீ அரு. ச. அ. அருணசலம்செட்டியாரவர்கள் ரூ 60.
(2) ,, முத்து.க.ஆவி.சேவு.சேவுகன்செட்டியாரவர்கள்ரூ65.
(3) ,, கண.க ராம.இராமநாதன்செட்டியாரவர்கள் ரூ 75.
(4) ,, கண.க.சொ.சொக்கலிங்கஞ்செட்டியாரவர்கள் ரூ 50.
(5) ,, செவு. சித. சிதம்பரம்செட்டியாரவர்கள் ரூ120.
(6) ,, வெ.கண.மா.மு.கதிரேசன்செட்டியாரவர்கள் ரூ50.
(7) ,, சுப.ராம.சுப.சுப்பிரமணியஞ்செட்டியாரவர்கள்ரூ55.
(8) ,, கண. க. லெட்சுமணன்செட்டியாரவர்கள் ரூ 50.

(9) மகா-ா-ா-ஸ்ரீ வெ. கண. வெ. கண்ணப்பசெட்டியாரவர்கள் ரூ 100.
(10) ,, சுப.ராம.ராம.ராமசாமிசெட்டியாரவர்கள் ரூ 55.
(11) ,, அ. பெரி-அவர்கள் ரூ 50.
(12) ,, கண. உல. ராம அவர்கள் ரூ 15.
(13) ,, வெ. கண. சுப. அவர்கள் ரூ 50.
(14) ,, சுப. அ. வெ. அவர்கள் ரூ 35.
(15) ,, அரு. சேவு. அவர்கள் ரூ 60.
(16) ,, கண. க. அவர்கள் ரூ 50.
(17) ,, குப. அ. நா. மு. அவர்கள் ரூ 30.
(18) ,, சித. கண. ச. ராம. அவர்கள் ரூ 35.
(19) ,, கண. மெ. மு. அவர்கள் ரூ 35.
(20) ,, கண. மெ. நா. அவர்கள் ரூ 45.
(21) ,, கண. உல. மா. அவர்கள் ரூ 50.
(22) ,, ஆ. வீர. விக. தி. குள-அவர்கள் ரூ 50.
(23) ,, கண. லெ. லெ. அவர்கள் ரூ 50.
(24) ,, சுப. ராம. மெ. மெய்யப்பசெட்டியாரவர்கள் ரூ 50.
(25) ,, ஆசு. பசு. அவர்கள் ரூ 75.

இவர்கட்கு இச்சங்கத்தார் நன்றிபாராட்டி வந்தனமளிக்கின்றூர்கள்.

III. இவ்வருஷம்நடைபெற்ற சங்கம் பண்டிதபரீக்ஷையில் இரண்டாவதுவகுப்பில் முதலில்தேறிய பாலாம்பிகை அம்மாளுக்கு (Special case ஆக) ஐம்பதுரூபாபெறுமான தங்கப்பதக்கம் அளிக்கவேண்டுமென்று தீர்மானிக்கலாயிற்று.

IV. இவ்வருஷம் நடைபெற்ற சங்கம் பிரவேசபண்டிதபரீக்ஷையில் தேர்ச்சிபெறாத கலாசாலை மாணவருள் இருவரை (Special case ஆக)மேல்வகுப்பிற் சேர்த்துக்கொண்டு கல்விகற்றுக்கொடுக்கவும், அவர்கட்குப் போஷணை அளித்துவரவும் தீர்மானிக்கலாயிற்று.

B. இராஜராஜேஸ்வரஸேதுபதி,
அக்கிராஸனதிபதி.
4—7—1921.

---

# தொல்காப்பிய வாராய்ச்சி

## நான்காவது புணரியல்.



(1) மூன்றுதலை யிட்ட முப்பதிற் றெழுத்தி
னிரண்டுதலை யிட்ட முதலா கிருபஃ
தறுநான் கீற்றொடு நெறிநின் றியலு
மெல்லா மொழிக்கு மிறுதியு முதலு
மெய்யே யுயிரென் றாயீ ரியல.

(இ-ள்) மூன்றை முடியிலேயிட்ட முப்பதெழுத்துக்களுள்ளே இருபத்துநான்காகிய மொழியீற்றெழுத்துக்களோடு இரண்டை முடியிலேயிட்ட மொழிக்குமுதலாகின்ற இருபதெழுத்துக்களும் ஆகிய இவற்றைத் தமக்கு முதலீறுநிலைகளாகக் கொண்டு வருநெறியிலே நிலைமைபெற்று நடக்கும் எவ்வகைபட்டமொழிக்கும் முதற்கண் உள்ளனவும் ஈற்றின்கண் உள்ளனவும் ஆகிய எழுத்துக்கள் மெய்யும் உயிரும் என்று கூறப்பட்ட அவ்விரண்டியல்புடையன எ-று. முதலாகிருபஃது—வினைத்தொகை.

எழுத்துக்கள்முப்பத்துமூன்றனுள் ஈற்றினும் முதலினும் வருவன நாற்பத்தாறு என்றனர். அவற்றுள் முதற்கண் வரும் எழுத்துக்களுட் சில ஈற்றின்கண்ணும் வருமென் றறிவித்தற்கு. அவ்விரண்டிடத்தும் வருவன பன்னீருயிரும் குற்றியலுகரமும் ஞநமயவக்களுமாம். முதலுக்கேவருவன கசதபக்கள். ஈற்றிற்கேவருவன ணனரலழளக்கள். முதலீறுகளில் வரப்பெறாதன டறஙக்கள். எனவே மொழிமுதற்கண்வருவன பன்னீருயிரும் மொழிமுதற் குற்றியலுகரமும் கசதப ஞநமயவக்களும் ஆகிய இருபத்திரண்டுமாம். ஈற்றின்கண்வருவன பன்னீருயிரும் மொழியீற்றுக்குற்றியலுகரமும் ஞ ண ன ந ம ய ர ல வ ழ ள க்களும் ஆகிய இருபத்துநான்குமாம்.

குற்றியலுகரமுதலாய மூன்றற்கும் ஏனையவற்றிற்குமுள்ள வேற்றுமையை அறிவித்தற்கு "மூன்றுதலையிட்டமுப்பதிற்றெழுத்தின்" என்றார்; எற்புழிக் கோடலென்னும் உத்திபற்றி அவ்வேனைய மூன்றனுள், குற்றியலுகரத்தையே கொள்க. என்னை? அஃதொன்றே யீண்டுப் புணர்ச்சியிடத்து வேற்றுமை பெற்றிருத்தலின் என்க. இனி மொழிமுதற்குற்றியலுகரத்திற்கும் மொழியீற்றுக்

குற்றியலுகரத்திற்கும் வேறுபாடு இல்லை என்பதறிவித்தற்கும் அவ்வனங் கூறினர் என்றலும் ஒன்று. உகரத்திற்கும் மொழிமுதற் குற்றியலுகரத்திற்குமுள்ள வேற்றுமை அறிவித்தற்கு "இரண்டுதலையிட்ட முதலாகிருபஃது" என்றார். இனி அறுநான்கிற்றினுள்ளும் உகரமும் குற்றியலுகரமும் வருவனவாயிருப்பவும் முதற்கண்மட்டும் அங்ஙனம் பகுத்துக்கூறியதனற் போந்த பயன்முன் யாதோவெனிற் கூறுதும். ஈற்றுக்குற்றியலுகரம் தனித்தவிதியுடையதுவாய்ப் பெரும்பான்மையாக வழங்கும் வழக்குப்பயிற்சிநோக்கி அங்ஙனம் பகுத்திலர் என்க. இனி ஒற்றுவிமுன்னுகப் படைத்து உயிர்மெய்வருதலிற் பன்னீருயிருடன் இவற்றிற்கும் வேற்றுமையுள்ளதாயிற்று.

முதலும் இறுதியும் என்னுது இறுதியும் முதலும் என்றார், புணர்ச்சியிலக்கணம் தெரிவிக்கின்றாராதலின்.

உயிரும் மெய்படைத்துப் புணர்தலின் உயிரே மெய் எனக் கூறுது மாற்றிக்கூறினர். "முதலாகிருபஃது" "அறுநான்கிற்றெடு" என்பன மொழிக்கட்பயின்றுவருநிலைகுறித்தாராதலின் ஈற்றை முற்கூறுராயினர். புணர்ச்சிக்கண் ஈறு சிறப்பாதல் கருதி "அறுநான் கிற்றெடு" என ஒடுக்கொடுத்தாருமாம். இறுதியினும் முதலினும் இவ்வெழுத்துக்கள் வரும். அவ்வருதலை மேற் கூறுப. இறுதியும் முதலும் இங்ஙனமாகவே இடையினும் அவ்விரண்டனையன்றிப் பிற வில்லை என்க. இதனுனே உயிர்மெய்யெழுத் தோரெழுத்தன்று என்பது பெற்றும். நிலைவருமொழிகள் புணருமிடத்தும் அப்புணர்ந்தவற்றைப் பிரிக்குமிடத்தும் இன்ன பிறவிடத்தும் இவ்வுண்மை நன்குபுலப்படும்.

2. அவற்றுள், மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்.

(இ-ள்) முற்கூறிய மெய்யும் உயிருமாகிய அவ்விரண்டனுள் மொழியீற்றின்கண்வரும் மெய்யெல்லாம் புள்ளிபெற்றே நிற்கும் எ-று. ஈறு மெய் என மாறுக.

எனவே மொழிக்கு முதலாகும் மெய்யெல்லாம் புள்ளிபெருமலும் இடையாயினவெல்லாம் புள்ளிபெற்றும் பெருமலும் கடையாயினவெல்லாம் புள்ளிபெற்றும் நிற்குமென்க.

இடையிற் பிரித்தலை மெய்ம்மயக்கத்திலும் புணர்ச்சிக்கண்ணும் "மெய்யுயிர்நீங்கின்" என்னுஞ் சூத்திரவுரையினும் பிறவற்றினும் கண்டுகொள்க.

இது "புள்ளியீற்றுமுனுயிர்" என்னும் சூத்திரத்தோடு மாட்டேறி நின்றது; மேற்கூறும் புணர்ச்சிகளெல்லாம் இருமொழிப்புணர்ச்சியல்லது இல்லை என்றும், அஃது எழுத்துவகையான் நான்காமென்றும், அவ்விருவகைமொழியும் சொல்வகையான் நான்காகும் என்றும், அங்ஙனம் புணர்வது சொல்லுஞ்சொல்லும் அன்று எழுத்தும் எழுத்துமே என்றும், அங்ஙனம் புணரும்வழி இயல்பொன்றும் திரிபிடன் மூன்றென்றும், அத்திரிபுகடாம் இவை என்றும், நிலைமொழி அடையடுத்தும் வருமொழியடையடுத்தும் அவ்விருமொழியும் அடையடுத்தும் புணருமென்றும் மருவின்றொகுதியும் புணர்ச்சிபெறும் என்றும், மூவகைத்திரிபினுள் மிக்குப்புணரும் புணர்ச்சி இருவகைய என்றும், வேற்றுமையெனப்பட்ட அவற்றது பெயரும் முறையுந் தொகையும் இவையென்றும், நான்காவதும் ஏழாவதும் ஒல்வழி ஒற்றிடைமிகும் என்றும், அகரமுனையிலே ஆறனுருபி னகரக்கிளவி கெடும் என்றும், வேற்றுமைகள் பெயரின் பின்னிடத்தனவாம் என்றும், பெயர்கட்குப் பெயரும் முறையும் இவையென்றும், அவற்றின்பின் சாரியை வருமென்றும், அச்சாரியைகள் இவையென்றும், அவை இவ்வுழித் திரிபும் இயல்பும் பெறும் என்றும், அச்சாரியைகளெல்லாம் புணர்மொழியுள்ளே இவ்விச்சொல்லோடு கூடிவரும் என்றும், அத்து அற்று என்பவற்றின்முன் வரும் வலி மிகும் என்றும், எழுத்தின்சாரியை இவையென்றும், அவ்வெழுத்தின்சாரியையுள் இவ்விவற்றிற் கிவ்விவை என்றும், புணர்ச்சிக்கு இன்றியமையாதனவற்றை எடுத்துக்கூறினவர், முன்னர் "மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்" என்ற சூத்திரத்தின் செய்கையைப் பின்னர்ப் "புள்ளியீற்றின்முனுயிர்" என விதித்தனராதலின் என்க.

ஆசிரியர் உயிர்மெய்யெழுத்தை ஓரெழுத்தாகக் கொள்ளாமையானே உயிர்மெய் யெழுத்து மொழிமுதற்கண்வரின் அதனை மெய்ம்முதலாகவும் ஈற்றின்கண்வரின் உயிரீறாகவும் விதித்தனர்; எழுத்துக்கள் முப்பது என்றமைக்கேற்ப "மெய்யேயுயிரென்றாயீரியல" என்று புகுந்தமையின் மெய்ம்முதன் மெய்யீறு என்று கூறுங்கால் முதற்கண் அது புள்ளி பெறாது உயிராலேறப்பெற்றும் ஈற்றிற் றனியாகப் புள்ளிபெற்றும் வரும் என்பதை இச்சூத்திரத்தான் விளக்கினர் என்க.

இங்ஙனங் கூறுக்கால் வருமொழிமுதற்கண் மெய் நிற்பின் நிலைமொழியீற்றுயிர் அம்மெய்ம்மே லேறுங்கொல்லோ என்னும் ஆசங்கைக்

கிடனும் என்க. புள்ளிபெறும் என்று இவ்வியற்கண் கூறுதலின் வேறொருபொருள் நுதலிவந்ததென்பது வெளிப்படை; ஒற்றுமைநயத் தானே உயிரேற அஃதிடங்கொடுக்குமென்பது குறிப்பித்தாரு மாம். அன்றேலிச்சூத்திரங் கூறியதுகூறலாய்முடியும் என்பது, "மெய்யினி யற்கை" "புள்ளியில்லா" "மெய்யின்வழியது" "உயிர்மெய் யல்லன மொழிமுதலாகா" என்றற் றொடக்கத்த சூத்திரங்களாற் பெறப்படும். என்னை? முதற்கண் மெய் உயிரொடுசேர்ந்தும் ஈற்றிற் சேர்ந்தும் சோரமலும் வரும் என்று அறியக்கிடத்தலின் என்க. மெய்யானது உயிரொடு புணரிற் புள்ளிபெறாது.

(தொடரும்)

நவநீதகிருஷ்ணபாரதி.

ஸ்ரீ

# புத்தகமதிப்புரை.

---

புதல்வர்கடமை:—இது, பெற்றோர்க்குப் புதல்வர் செய்யவேண் டியகடமைகளை விளக்கித் திரிசிரபுரம் நாஷனல்காலேஜ் தலைமைத்தமிழ்ப் டண்டிதர் ஸ்ரீமத்-ம. கோபாலகிருஷ்ணையரவர்களால் இனியநடையில் எழுதி வெளியிடப்பட்டது. இதில் இதிகாசபுராணங்களிலிருந்தும் மேனாட்டு மேனாட்டுச்சரித்திரங்களிலிருந்தும் நாற்பது நல்லோர்களின் சரித்திரங்கள் ஆங்காங்குச் சந்தர்ப்பத்துக்கிணங்கச் சேர்க்கப்பட் டுள்ளன. இடையிடையே கம்பராமாயணம் திருக்குறள் வில்லிபாரதம் விநாயகபுராணம் பிரபோதசந்திரோதயம் அரும்பொருட்டிரட்டு முதலிய நூல்களிலிருந்து சமயோசிதமானசெய்யுட்கள் பல, மேற்கோளாக எடுத் தாளப்பட்டுள்ளன. அவற்றுக்கு அரும்பதவுரையும் இறுதியிற் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது படிப்பவர்க்கு நற்குண நற்செயல்களை விருத்திசெய்யத்தக்கதாயிருப்பதால், கலாசாலைமாணவர்க்குப் பாடபுத் தகமாக வைக்கத் தகுதியுள்ளதாயிருக்கிறது. இதன் விலை ரூ 0-12-0. வேண்டுவோர், மதுரை, புதுமண்டபத்திற் புத்தகவியாபாரஞ்செய்யும் இ. மா. கோபாலகிருஷ்ணக்கோனருக்கு எழுதிப் பெறலாம்.

---

பத்திராதிபர்.

லாவது—விதிவிலக்குகளுக் கடங்காது சுவேச்சாசாரிகளாய் விலங்கினம் போல வேண்டியபடி யனுபவிக்கப்பெறுதல். இங்குப் பெறுதல் சித்த மில்லாத சாத்தியக்குறிப்புணாநின்றது. ஆறு—உபாயம்; அது பிரமாண சாஸ்திரங்களேயும், பிராமாணிகர்களேயும் தலையெடுக்கவொட்டாமல் வேண் டியன புரிதலும் சாருவாகங்கற்பித்தலும் முதலியன. செய்ம்மின் என் றது பிரமாணசாஸ்திரங்களாலும் பிராமாணிகர்களாலும் அறிவிக்கப் பட்ட சிஷ்டாசாரத்தா விறந்தொழிந்த காமசாரமான ஸ்வேச்சாசாரந் தலையெடுக்குமாறு புத்திபூர்வகமாக முயன்றுசெய்யுங்கள் என விதிக்கிலக் காக்கிச் சிற்றினத்தின் ஸ்வமதஸித்திக்கு உபாயங்கூறியவாறு. என்று சொல்லுவார் எனக் கூட்டுக. உறுதியாக-உறுதிப்பொருளாக. சொல்லுவார் என்றது சொல்லும் சிற்றினத்தார்செய லென்றவாறு. பின் 'தீற்றுபவர்' என்பதற்கும் இஃதொக்கும். நறுநெய்யுட்டோய்த்த பாகுபெய்த அடை—அப்பவகையு ளொன்று; அது சிலேபி என்னும் திசைச்சொல்லால் வழங் கப்படுவது. அடை—அடப்படுவதால் அப்பெயர்பெற்றது. நுகராமற் காத்து என்றது இவ்வடை நன்றாகவேகவில்லையென்று பொய்க்குற்றங் கூறி நுகரவிடாமற் பிடுங்கியெறிந்து தடுத்து என்றவாறு. கண்ணினேச் சொருகுவித்து—கண்ணின் கருவிழியை மேலிமையுட்சொருகி மறைத் துக்கொள்ளப்பண்ணி; குருடாக்கி என்றபடி. கண்விழித்திருப்பின் இட் டிகை தின்னற்கிசையார் என்பது அவர்கருத்து. இதனுல் வேதாகமப் பிரமாண சாஸ்திரஞானமுடையாரும் இவர்கூற்றை யுட்கொள்ளற்கு இசையார் என்பது பெறப்படும். இட்டிகை—சுடுமண்கட்டி. தீற்றுதல்—(இது நன்றாகவெந்திருக்கிறதென்று சொல்லித்) தின்பித்தல். ஊட்டுதல் உண்பித்தலாவதுபோலத் தீற்றுதல் தின்பித்தலாயிற்று. ஒருவர் நுகர்ந்துகொண்டிருக்கும் கட்டியடைபோலு மினிமையும் இன்பமும் பயக்கும் விதிவழியொழுக்கமாகிய சிஷ்டாசாரத்தைப் பயனற்றதென்று பழித்து, நேத்திரங்கள்போன்ற வேதாகமப்பிரமாணங்களைமறைப்பித்துக் கொண்டு, சுடுமண்கட்டிபோலும் இன்னுமையும் தீங்கும் பயக்கும் காம சாரவொழுக்கத்தைப் புகட்டவரும் சிற்றினத்தார்கூற்றுக்குச் செவி கொடுக்கலாகாதென்பது கருத்து. பின்னடியிரண்டும் பழமொழிக்கூற்று. அதில் இட்டிகைதீற்றல் என அநிஷ்டோபதேசத்தை யுணர்த்திவந்த குறிப்புமொழியே இங்கெடுத்துக்கொண்ட பழமொழியாயிற்று. அறி வுடையார்க்குக் காமசாரவொழுக்கமே அநிஷ்டமென்பதையும் சிஷ்டாசார

வொழுக்கமே இஷ்டமென்பதையும் இங்கு நிரூபிக்கில் விரியும். வல்லார் வாய்க் கேட்டுணர்க.

159. அறஞ்செய் பவற்கு மறவுழி நோக்கித்
திறந்தெரிந்து செய்தக்காற் செல்வுழி நன்றும்
புறஞ்செய்யச் செல்வம் பெருகு மறஞ்செய்ய
வல்லவை நீங்கி விடும்.

எ-று, அறத்தைச்செய்பவற்கும் அறத்தைச்செய்யுமிடத்தைப்பார்த்து வேறுபாடுதெரிந்துசெய்தக்காற் செல்லு மறுமையுலகத்தின்கண் மிகவு நன்றும்; செல்வத்துக்குவேண்டுவனசெய்யச் செல்வம்பெருகும், அதுபோல வறத்தைச்செய்யப் பாவங்களிங்கு மாதலா னென்றவாறு.

(குறிப்பு) இது, அறஞ்செய்வார் இடனுந் திறனு மறிந்து செய்க வென்கிறது. அறத்தைச்செய்யுமிடத்தைப் பார்த்தலாவது தேச கால பாத்திர விஷய முதலியவற்றாற் றகுதியுடையதென வறிதல். வேறுபாடு தெரிதலாவது இதனினு மிது மிக்கது என அறத்தின் றாரதம்மியமறிதல். மிகவு நன்று மென்றது இவ்வாறறியாதுசெய்யும் அறத்தின் பயனை இன்பத்தினும் மிக்கவின்ப மளிக்கு மென்றவாறு. புறஞ்செய்கையாவது இடையூறுபோக்கிப் பொருள்தேடலும், தேடியபொருளைப் பாதுகாத்தலு முதலியனவாதலா லவையெல்லாமடங்கச் செல்வத்திக்கு வேண்டுவனசெய்ய வெனப் பொருளுரைக்கப்பட்டது. அதுபோல என்றது ஒப்பலொப்பான்வந்த எடுத்துக்காட்டுவமச்சொல். அறஞ்செய்ய வல்லவைநீங்கிவிடுமென்பது பழமொழிக்கூற்று. இது 'அறம்வளரப் பாவந்தேயும்' எனக் கலவழக்கான்வந்த பழமொழிப்பொருளை யுடையது. இப்பழமொழி 'ஒழுக்கத்து நீத்தார்'* என்னுங் குறளுரையி னுரையா யெடுத்தாளப்பட்டது.

160. வருவாய் சிறிதெனினும் வைகலு மீண்டிற்
பெருவாய்த்தா நிற்கும் பெரிது-மொருவா
றொளியீண்டி நின்று னுலகம் விளக்குந்
துளியீண்டில் வெள்ளந் தரும்.

எ-று, ஒருவர்க்குப் பொருள்வருவாய் சிறிதாயினு நாடோறுந் துஞ்சாமற் சிறிதாயினு மீண்டிற் பெரியவளவினையுடைத்தாய்ப் பெரிதுநிற்குஞ்செல்வமுன

* கு-ம் அதி. நீத்தார்பெருமை. க. பரிமேலழகருரை.

தாம்; ஒருபடியே பலமீன்களு மீண்டி வெளிப்பட்டுநின்று லுலகமெல்லா மிரு ணீங்க விளக்கும்; மழைபெய்யுந்துளிகளும் விடாதேநின்றீண்டிற் கடல்போலு நீரையுந் தருமாதலா னென்றவாறு.

(குறிப்பு) இது, பொருள்கூட்டுமாறு கூறுகிறது. பொருள்வருவாய்—பொருள்வருவதற்குரியவாயில்கள். அவை வாணிகம், உழவு, வினையாட்சி, படுபொருள்தொகுத்தல் முதலியன; பயனின்சிறுமை பயக்கும் வாயிலின்மே னின்றது. துஞ்சாமல்—இடையறுமல். ஈண்டில்—கூடில். பெரிதுநிற்றல்—நீடித்துநிற்றல். செல்வமுளதாம் என்றது சொல்லெச்சம். ஒருபடியேவிளக்கும் எனக் கூட்டுக. ஒளி ஆகுபெயராய் வான்மீனினங்களை யுணர்த்திற்று. பின்னடியிரண்டும் செய்யுள்வடிவாக இரண்டடுக்கிவந்ததொரு பழமொழி. அதன் ஒருபகுதி 'பலதுளி பெருவெள்ளம்' என வழங்கப்படுகிறது. ஒளியீண்டிநின்றுலுலகம் விளக்கும் என்றதில் ஈட்டம் ஒருவடிவாகக் கூடலும். 'பன்மீனும்காய்கலாவாகுநிலா'* என்பத னீட்டம் பலவடிவாகிநிற்றலுமாகிய வேறுபாடுண்மையா னிவைதம்முண் மாறுபாடின்மை யறிக.

161\. இனியாரு மில்லாதா ரெம்மிற் பிறர்யார்
தனியேம்யா மென்றொருவர் தாமடியல் வேண்டா
முனிவில ராகி முயல்க முனிவில்லார்
முன்னிய தெய்தாமை யில்.

எ-து, இப்பொழுது பற்றுக வொருவரையுமில்லாதா ரெம்மைப்போற் பிறர்யாவர்; யாந் தனியேமாயினே மென்றொருவர் நினைத்து முயற்சிதவிர வேண்டா; வெறுப்பிலராய் மடியாதே கருமஞ்செய்யவே முயல்க; மனத்தின் வெறுப்பில்லாதார் தாம்நினைத்தது பெறுதொழிதலில்லையாதலா னென்றவாறு.

(குறிப்பு) இது, விடாமுயற்சியால் வேண்டியதடையலாமென்கிறது. இப்பொழுது என்றது முயற்சியின்றி மடிந்திருப்பான் மடிந்திருக்குங்காலத்தைச் சுட்டிநின்றது. பற்று—சார்பு. வெறுப்பிலராய் என்றது முயற்சியில் விருப்புடையயாகி என்றபடி. மடியாதே—சோம்பாமல். கருமம்—தாம்வேண்டிய பயன்பயக்கும் தொழில். நினைத்தது—விரும்பியது. பெறுதொழிதலில்லையென்றது பெறுதல் ஒருதலையாயுள்ள தென்றவாறு. இப்பொருள் "மடியிலா மன்னவ னெய்து மடி

* இந்நூலின் 47-ம் செய்யுள்.

யளந்தான்—ரூஅய தெல்லா மொருங்கு" என முப்பாலுட்* சொல்லப்பட்டது. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க.

162. கூஉய்க் கொடுப்பதொன் றில்லெனினுஞ் சார்ந்தார்க்குத்
தூஉய்ப் பயின்றாரே துன்பந் துடைக்கிற்பார்
வாய்ப்பத்தான் வாடியக் கண்ணும் பெருங்குதிரை
யாப்புள்வே றாகி விடும்.

எ-து, பிறரையழைத்துக் கொடுப்பதொருபொருள் தமக்கில்லையாயினுந் தம்மை யடைந்தார்க்குப் பொருளைத்தூவிப் பயின்றுவந்தாரே பிறர்துன்பந் துடைக்கவல்லார்; வாய்ப்பத் தான்வாடியவிடத்துஞ் சிறப்புடையகுதிரை பண்ணிட்டுவிசித்தவிடத்து வாடாக்குதிரைபோல வேறாய் வினைக்குரித்தாம்; அது போல வென்றவாறு.

(குறிப்பு) இது, உதாரகுணமுடையாரே பிறர்துன்ப மொழிக்க வல்லார் என்கிறது. ஒருபொருள் தமக்கில்லையாயினும் பிறர்துன்பந் துடைக்கவல்லார் எனக் கூட்டுக. தம்மையடைந்தார்க்கு என்றது தாம் பொருளுடையராகியஞான்று தம்மையடைந்தார்க்கு என்றவாறு. தூவுதல்-கொய்தெனநினைக் தள்ளியிடுதல். வல்லார் என்றது வல்லவராவர் எனப் பயனிலையாயிற்று. வாடியவிடத்தும்—வயிற்றுக்கிரையின்றி மிக மெலிந்திருந்தாலும். சிறப்புடைய குதிரை—பெரும்பிறப்புடைய ஆடல் நடைபயின்ற குதிரை. பண்ணிட்டுவிசித்தல்—சேணம்வைத்துக் கட்டுதல். வேறாய்—வீறுடையதாகி. வினைக்கு—போர்க்களத்துய்த்தற்கு. ஆடன்மாவாகிய பெரும்பிறப்புடைய குதிரை வாட்டமுற்றவிடத்தும் போரிடைச்செலுத்தில் வீறுடையதாகிச் சென்றுதவுதல்போல உதாரகுணமுடையோர் வறுமையுற்றவிடத்தும் உற்றோர்க் குறுதுயர் தீர்ப்பர் என்பது கருத்து. இதன் பழமொழிவடிவமும் வந்தவழிக் கண்டுகொள்க.

163. தோற்றம் பெரிய நகையினு ரந்நகை
யாற்று தவனை யடைந்தொழுகல்—யாற்றின்
கயல்புரை யுண்கட் கனங்குழா யஃதா
றுயவுகெப் யுட்குளிக்கு மாறு.

---

* 61-ம் அதி. மடியின்மை-௧௦.

எ-து, தோற்றத்தாற்பெரியவாசையையுடையா ரவ்வாசையைத்தீர்க்க வாற்ருதவரையடைந்துவாழ்தல், யாற்றின்கட் கயலேயொவ்வாநின்றவுண்கட் கனங்குழாய்! தேருருட்கு நடத்தற்கிடு முயவுநெய்யின்க ணொருவன்குளிக்கு மதனேடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, ஒருகுறை தீரவிரும்புவோர் அது தீர்ப்பாரைத் தெரிந் தடையவேண்டு மென்கிறது. 'தோற்றத்தாற் பெரிய' என்றது ஆசையின் இயல்புகூறியவாறு. 'ஆராவியற்கையவா'* என்றார் பிறரும். "அந்நசை யாற்ருதவர்" என்பது 'நோய்நோக்கொன் றந்நோய் மருந்து''† என்பதுபோல உருபு தொக்குநின்றமையால் அவ்வாசையைத் தீர்க்க வாற்ருதவரெனப் பொருளுரைக்கப்பட்டது. அவரையடைந்து வாழ்த லாவது—அவர் தீர்ப்பரெனநம்பி அவரைப் பின்பற்றிக்கொண்டிருத்தல். ஒழுகல் அஃது எனக் கூட்டி, ஒழுகல் யாதொன்றுண்டு அஃது எனச் சுட்டடினியையும் வினு வருவித் துரைத்துக்கொள்க. உயவுநெய்—தேருருளின் றுளைக்கும் அச்சுக்கு மிடையே அவை தேயாது சிக்காது எளிதினுருளுமாறு கற்றுழஞ்சருகு முதலியன சுட்ட கரித்தூள் கலந் திடும் ஆமணக்கெண்ணெய். இது 'மசகு' என இக்காலத்து வழங்கப்படு கிறது. உடலழுக்குப்போக்கவிரும்பு மொருவன் அவ்வழுக்குப் போக்க வல்ல நன்னீரிற் குளித்துப் போக்காது அதனைப் போக்கமாட்டாத உயவுநெய்யுட்குளித்தலால் அந்நெய்யுட்கலந்த கரிக்கசடும் உடம்பிற் பற்ற அது நீராலும் போக்கப்படாதவாறுபோலத் தன்குறைதீரவிரும்பு மொருவன் அது தீர்க்கவல்ல நன்னீர்மையுடையாரை நாடித் தீர்த்துக் கொள்ளாது அது தீர்க்கமாட்டாத இழிகுணமுடையாரை யொட்டி யொழுகின் அவரதுநேயத்தா லவர்க்குள்ள குறையுஞ் சேரப் பெருங் குறையாமாதலாற் பின்பு தன்குறைதீர்க்கவல்லராயிருந்த நன்னீர்மை யுடையோராலுந் தீர்க்கப்படாதெனப் பொருளை விரித்துரைத்துக் கொள்க. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க. இது பொருளொப்புமைபற்றிக்"குளிக்கப்போய்ச் சேற்றைப்பூசிக்கொண்டாற் போலும்" என வழங்கப்படுகிறது.

---

* திருக்குறள் 37-ம் அதி அவாவறுத்தல்-௧௦.

† ஷ 110-ம் அதி. குறிப்பறிதல்-௧.

164. செறலிற் கொலைபுரிந்து சேணுவப்ப ராகி
யறிவி னருள்புரிந்து செல்லார்—பிறிதி
னுயிர்செகுத் தூன்றுய்த் தொழுகுத லோம்பார்
தயிர்சிதைத்து மற்றொன் றடல்.

எ-து, செற்றங்கொண்டாரைப்போலக் கொலையைவிரும்பித் தமக்கு மறுமையின்கண்ணே தாமேற் சேய்த்தாநின்ற வின்பத்தைப்பெற வுவப்பாராகித் தம் மறிவினாற் பிறர்க் கருளைச்செய்து விரும்பிச்செல்லாராய்ப் பிறிதொன்றி னுடையவுயிரை மறுமைக்குநன்மைக்குக்காரணமாமென் றதனைக்கொன் றூனினை நுகர்ந்து நல்லாரயொழுகுதல், பாதுகாவாதே தான் சோற்றுக்குக்கறியாகியதயிரைச்சிதைத்து மற்றொருகறியாக வடுதலோடொக்கு மென்றவாறு.

(குறிப்பு) இது, "நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்-கொன்றாகு மாக்கங் கடை" என்கிறது. 'செறல் என்னும் அஃறிணைச்சொல் இங்குச் செறற்சொல்லாய்ச் செற்றங்கொண்டார்மேல் நின்றது. இன்னுருபு ஒப்புப்பொருளில்வந்தது. தாம் பெறவுவப்பராகி யெனக் கூட்டுக. சேண் என்றது ஆகுபெயராய்ச் சேய்த்தாநின்ற துறக்க வின்பத்தையுணர்த்திற்று. மேற் சேய்த்தாநின்ற வென்றது இம்மையின் அணித்தா யொருபயனுமில்லையென்பது குறிப்பு. தம்மறிவினால் என்றது அருள்செய்தற்குரியகருவியி னெளிமைகூறியவாறு. இதனாற் கொலைசெய்தற்குரிய சாதனங்களின்வலிமையும் இடர்ப்பாடும் குறித்துணரப்படும். பிறர்க்கு என அஃறிணையுயிருமடங்கச் சிறப்புப்பற்றி உயர்திணைச்சொல்லால் வழங்கப்பட்டது. விரும்பிச்செல்லாராய் என்றது அவ்வருளறத்தினை விரும்பியொழுகாமல் என்றவாறு. பிறிதொன்றினுடையவுயிர் என்றது இராகுவின்றலை என்பதுபோலொற்றுமைப்பொருளில் வந்தது; பிறிதோருயிர் என்பது பொருள். உயிர் என்றது உயிருடன் கூடியவுடலை யெனக் கொள்க. மறுமைக்கு என்றது வேற்றுமைமயக்கம்; மறுமையின்கண் என்றபடி. நன்மை-இன்பம். கொன்றூனினை நுகர்ந்து என்றது கொல்லலும், ஊனுகர்தலுமாகிய இரண்டு தீவினைகளைப்புரிந்து என்றபடி. நல்லாரயொழுகுதல் என்றது அத் தீவினைபுரிந்தமை காரணமாகத் தீயரெனப்படாது வேள்விபுரிந்தமையே காரணமாக முன்புள்ள தீமையுந் தீர்ந்து நல்லவராயினரென் றுலகம் சொல்லுமாறொழுகினும் அவ்வொழுக்கம் என்றவாறு. இது எழுவாய். பாதுகாவாதே சிதைத்து எனக் கூட்டுக. தான் என்றது பிறிதொரு

சார்பினைவேண்டாது தனியே என்னும் பொருளுணர நின்றது. தான் கறியாகிய எனக் கூட்டுக. கறி-சோற்றுடனுண்ணும் உபாகாரம். தயிர் சிதைத்து என்றது தயிரின்வடிவழித்து மோராக்கிக்கொண்டு என்ற வாறு. மற்றொருகறி-மோர்க்குழம்பு. தயிரடலாகா தென்னும் விதி கடந்து அதனையட்டுப் பிறிதொருகறியாக்கியுண்ணு மொழுக்கத்தினும் அவ்விதிகடவாது அதனையிருந்தபடியே யருந்து மொழுக்கம் சிறந்த தானாற்போல, உயிரடலாகாதென்னும் விதிகடந்து அருள்சிதைய வேள் வியி லுயிர்செகுத்துண்ணுமொழுக்கத்தினும் அவ்விதிகடவாது உயிர் களிடத் துள்ளபடி யருளுடையரா யுயிர்சிதையா தொழுகுமொழுக்கமே துறந்தார்க்குச் சிறந்ததெனப் பொருளொடு பொருத்தியுரைத்துக் கொள்க. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக்கண்டுகொள்க.

165. மறுமனத்த னல்லாத மாநலத்த வேந்த
னுறுமனத்த னாகி யொழுகிற்—செறுமனத்தார்
பாயிரங் கூறிப் படைதொக்கா லென்செய்ப
வாயிரங் காக்கைக்கோர் கல்.

எ-து, குற்றமுடையமனத்தானல்லாத பெரியநலத்தினையுடைய வேந்த னெல்லார்மேலு மன்புற்றமனத்தானாகி யொழுகுவனாயிற் செறுமனத்தையுடைய பகைவர் வீரத்துக்குவேண்டு முகவுரைகள்சொல்லித் தம் படையைத்திரட்டினு லவ்வேந்தனை யென்செய்யவல்லர்; ஆயிரங்காக்கைக் கொருகல்லேறுபோல நிற்கு மவ்வரசென்றவாறு.

(குறிப்பு) இது, அரசர் தமரிடத்து அன்புடைமையாற் பகைவரைவெல்லும்வலியுடையராவர் என்கிறது. குற்றம்-"தேர்ந்து கண்ணோடாது தீவினையு மஞ்சலராய்ச் சேர்ந்தாரையெல்லாம் சிறிதுரைத்" தன் முதலிய வெருவந்தனபுரிதல். 'மாநலத்த' என்றது இங்கு எதிர்காலக் குறிப்புப்பெயரெச்சவினையாய்நின்றது; ஆதலால் பெரியநலத்தினை யுடையவேந்தன் என்றதற்கு, பெரியநலமாகிய வெற்றியையடைய விரும்பு மரசன் என்பது கருத்தாகக்கொள்க. எல்லார்மேலும் என்றது வினைசெய்வோரும், சுற்றத்தாரும், குடிகளும், தற்சார்ந்தோரு முதலிய தமர்களெல்லாரிடத்தும் என்றபடி. கல்லேறுபோலநிற்கும் என்றது கல்லெறிபோல ஓட்டாநிற்கும் என்றவாறு. 'கல்லேறு' என்றாராயினும் எறிகல் என்பது கருத்தாகக்கொள்க; இதன்பழமொழி "காக

மானவைகோடி கூடிநின்றாலுமோரு கல்லின்முன் னேதிர்நிற்குமோ" எனத் தாயுமானவர்பாடலில்* எடுத்தாளப்பட்டது.

166. தோற்றத்தாற் பொல்லார் துணையில்லார் நல்கூர்ந்தார்
மாற்றத்தாற் செற்றா ரெனவலிய ரட்டக்கா
லாற்றா தவாழுத கண்ணீ ரவையவர்க்குக்
கூற்றமாய் வீழ்ந்து விடும்.

எ-து, பிறந்தகுடியாற் பொலிவில்லார் தமக்கொருதுணையில்லார் தாம் வறியார் தாஞ்சொல்லுமாற்றங்களாற் றமக்குப் பகைவரென்றுகருதி யவரின் வலியா ரவரை நலிந்தக்கா லந்நலிவினை யாற்றமாட்டாது மற் றவாழுதகண்ணீரா கிய வவை யந்நலிந்தார்க்குக் கூற்றமாய்விழு மென்றவாறு.

(குறிப்பு) இது, எளியாரை நலியலாகாதென்கிறது. பிறந்தகுடியாற்பொலிவில்லார்-இழிகுலத்தினர். துணையில்லார்-ஆதாரவற்றவர். வறியார்-பொருளில்லாத எளியவர். தாம்சொல்லும் மாற்றங்களாவன-வலியார்க்கு எளியார் பணிந்துபேசும் மாபறியாது மக்களாதல் ஒப்புமையாற் றம்மோ டவரையொப்பித்து எதிர்த்துப்பேசும் மறுமொழிகள். நலிதல்-வருந்தச்செய்தல், கூற்றம்—உயிர்வேறு உடல்வேறாகக் கூறுபடுக்கும் காலக்கடவுளும், வாளுமாம். வீழ்ந்துவிடும்-ஒருசொல்; விடு தெளிவுணர்த்திநின்றது. எளியாரை நலியின் அந்நலிவு, நலிந்தார்க்கு நாசகாரணமா மென்பது கருத்து. ஆதலா லதுசெய்யலாகா தென்பது குறிப்பு. இதன் பழமொழி 'ஏழையழுதகண்ணீர்கூரியவாளோடொக்கும்' என்பதாம். இது, "அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே-செல்வத்தைத் தேய்க்கும் படை" எனக் குறளினும்† வழங்கப்பட்டது,

167. உடுக்கை மருந்துறையு ளுண்டியோ டின்ன
கொடுத்துக் குறைதீர்த்த லாற்றி—விடுத்தின்சொ
லியாமை யென்ப வெருமை பெறிந்தொருவர்
காயக்கு லோபிக்கு மாறு.

---

* எந்நாள்கண்ணியில்-பொருள். செய்-6.
† 56-ம் அதி. கொடுங்கோன்மை-5.

உ

கணபதிதுணை.

# படிக்காசுப்புலவர் சரித்திரச்சுருக்கம்.

இந்நூலாசிரியர் தொண்டைமண்டலத்திலுள்ள பொற்களத்தூரென்றுந் தென்களத்தூரென்றும் வழங்கு நகரத்திற் செங்குந்தர்மாபிலே இற்றைக்குச் சற்றேறக்குறைய இருநூற்றைம்பது வருடங்கட்குமுன் அவதரித்துப் பலதமிழ்நூல்களைக் கற்றுத் தெய்வீகம்விளங்கிய வாக்குடையவராய் இல்லறத்தில் வாழுநாளில், அந்நாட்டிலுள்ள வல்லநகரத்திற் காளத்தி வள்ளலைப்பாடிச் சிறந்தபரிசளிக்கப்பெற்றிருந்து, பின்பு மாவண்டூரிற் பிரபுவாயிருந்த கறுப்பமுதலியார்வேண்டுகோளின்படி தொண்டைமண்டலசதகமென்னு மோர்பிரபந்தத்தைப்பாடி யரங்கேற்றி அவரால் வேண்டிய திரவியங்க ளடைந்து பலதலங்களையுந் தெரிசித்துச் சிதம்பரத்தை யடைந்து ஸ்ரீ சபாநாயகரை வணங்கித் துதிக்கும்போது, அவர் பஞ்சாக்ஷரப்படியிற் பொற்காசுவைத்தருளப்பெற்று, அதனாற் படிக்காசுப்புலவரெனப் பெயர்கொண்டு, அங்கே சின்னாளிருந்து, பின் தென்னாட்டை யடைந்து, இரகுநாதசேதுபதிமுதலிய மன்னர்களைக் கண்டு பாடிப் பரிசுகொண்டு, காயற்பட்டினத்துச் சீதக்காதியென்னும் மகமதியப்பிரபுவைக் கண்டு அவர் கொடைமுதலிய நற்குணங்களைச் சிறப்பித்துப்பாடி, அப்பிரபுவால் மிக்க சிறப்புச்செய்யப்பெற்றிருந்து, பின்பு திருச்செந்தூர் முதலிய தலங்களையடைந்து வணங்கி வடதிசையைச்சார்ந்து திருத்தண்டலைநீணெறியென்னுந் தலத்தைத் தெரிசித்திருக்கும்போது, அங்குள்ள அன்பர்களின்வேண்டுகோளின்படி உலகோபகாரமாக இச் சதகத்தைப்பாடிச் சந்நிதியிலரங்கேற்றிச் சின்னாள் வசித்திருந்து பின்பு தருமபுர ஆதீனத்தையடைந்து அங்கு வீற்றிருந்தருளிய ஞானசாரியரால் ஞானதீக்கையும் சந்நியாசமும் பெற்றுப் படிக்காசுத்தம்பிரானெனப் பெயர்பூண்டிருக்குநாளில், ஒருநாட் காவிரிநீராடச் சென்றபொழுது கவசிப்பிள்ளையினிடங் கொடுத்த வஸ்திரத்தை வெள்ளமெடுத்துக்கொண்டு போய்விட அவன் வருந்தல்கண்டு,

*

"அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினு னம்மையது தப்பாதோ—வப்பாகே
ளிக்கலிங்கம் போனலென் னேகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்க முண்டே துணை"

என்னுஞ் செய்யுளைப் பாட, அவ்வஸ்திரம் மீண்டுங் கரையில்வரப்பெற்றுத் தமது நியதி முடித்திருந்தனர். இவ்வாறு பல விசித்திரப்பாக்களைப்பாடி, அங்கேயிருந்து தம்மாசிரிய ராக்ஞைப்படி வைத்திசுரர்கோயிலை யடைந்து, அக்கோயிற்சட்டளைப்பணிகளை நடாத்திக்கொண்டு புள்ளிருக்குவேளூர்க்கலம்பகமென்னும் ஓர்பிரபந்தமியற்றி, அச்சந்நிதியி லரங்கேற்றி வாழ்வுற்றிருந்தனர். பின்பு முன் தமக்குப் படிக்காசு தந்தருளிய சபாநாயகர்சந்நிதியிலே தொண்டுசெய்திருந்து நற்கதியடையவேண்டுமென்னும் அன்புமேலீட்டால் தம்மாசிரியரிடம் விடைபெற்றுச் சிதம்பரத்தைச் சார்ந்து ஒரு திருமடஞ் செய்திருந்துகொண்டு தினந்தோறுஞ் சபாநாயகரைத் தெரிசித்துவரும்பொழுது அவர் முன்போலப் பஞ்சாக்கரப்படியிற் பொற்காசுவைத்தருளப் பெற்றுச் சின்னாண் மாணுக்கர்களுக்குக் கல்விபயிற்றியிருந்து சபாநாயகருடைய திருவடியடைந்தாரென்பர்.

திருச்சிற்றம்பலம்.

---

உ

கடவுள்துணை

# பழமொழிவிளக்கம்

என்னும்

# தண்டலையார் சதகம்.*



## காப்பு.

சீர்கொண்ட கற்பகத்தின் வாதாவி நாயகனைத் தில்லை வாழுங்
கார்கொண்ட கரிமுகனை விகடசக்ர கணபதியைக் கருத்துள் வைப்பாம்
பேர்கொண்ட ஞானநா யகிபாகன் றண்டலையெம் பெருமான் மீதி
லேர்கொண்ட நவகண்ட மிசைந்தபழ மொழிவிளக்க மியம்பத் தானே.

வேதநெறி விளம்பியசொல் லாகமநூல் விளம்பியசொன் மிகுபு ராண
மேதுவினிற் காட்டியசொல் லிலக்கணச்சொல் லிசைந்தபொரு ளெல்லா நாடி
யாதிமுத லுலகுதனில் விளங்குபழ மொழிவிளக்க மறிந்து பாடச்
சோதிபெறு மதவேழ முகத்தொருவ னகத்தெனக்குத் துணைசெய் வானே.

## அவையடக்கம்.

வள்ளுவர்நா லாதிபல நூலிலுள வரும்பொருளை வண்மை யாக
வுள்ளபடி தெரிந்துணர்ந்த பெரியவர்கண் முன்னுனு மொருவன் போலப்
பள்ளமுது நீருலகிற் பரவுபழ மொழிவிளக்கம் பரிந்து கூறல்
வெள்ளைமதி யினன்கொல்லத் தெருவதனி லூசிவிற்கும் வினைய தாமே.

---

## நூல்.

---

வாமனிக்குர் தண்டலையார் திருக்கோயி லுட்புகுந்து வலமாய் வந்தே
யொருவிளக்கா கிலும்பசுவி னெய்புடன்று மறைநூலி னெளிர வைத்தாற்
கருவிளக்கும் பிறப்புமில்லை யிறப்புமில்லை கைலாசங் காணி யாகுந்
திருவிளக்கிட் டார்தமையே தெய்வமறிந் திடும்வினையுந் தீருந் தானே. (1)

"திருவிளக்கிட்டாரைத் தெய்வமறியும்" "விளக்கிட்டால் வினை தீரும்" என்பன பழமொழி.

---

* அகப்பொரு ளொன்றின்மேலாவது புறப்பொரு ளொன்றின் மேலாவது கற்பித்து நூறுகவிபாடுவது சதகமென்பர்.

கூன்செய்த பிறையணியுந் தண்டலையார் கருணைசெய்து கோடி கோடி
யான்செய்த வினையகற்றி நன்மைசெய்தா ருபகார மென்னு ளுண்டோ
வூன்செய்த வுயிர்வளரத் தவந்தானம் வளர்ந்தேற வுதவி யாக
வான்செய்த நன்றிக்கு வையகமென் செய்யுமதை மறந்தி டாதே. (2)

உயிர்செய்த வினையாற் சரீரம் உண்டாவதனால் ஊன்செய்த உயிர் என்றார். ஊன்–உடம்பு. "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்–டென்னாற்றுங் கொல்லோ வுலகு" என்பது திருக்குறள். 'வான்செய்த வுதவிக்கு வையகந்தானென்செய்யும்' என்பது பழமொழி. வான்–மேகம்.

அட்டதிசை யெங்கனும்போ யலைந்தாலும் பாதாள மதிற்சென் றாலும்
பட்டமென வானூடு பறந்தாலு மென்னவதிற் பயனுண் டாமோ
மிட்டோர மண்சமைந்த தண்டலையா ரேமுன்னாட் பெரியோர் கையி
லிட்டபடி யேயொழிய வேறாசைப் படில்வருவ தில்லைதானே. (3)

"இட்டபடியன்றி யேறாசைப் பட்டாற்கிடைக்குமோ"? என்பது பழமொழி.

தன்மமதைச் செயல்வேண்டுந் தண்டலைநீ ணெறியாரே தயவு செய்வார்
வன்மவினை செயல்வேண்டா பொய்வேண்டா பிறரையொன்றும் வருத்தல் [வேண்டா
சன்மநெறி வரல்வேண்டா வேண்டுவது பலர்க்குமுப கார மாகு
நன்மைசெய்தார் நலம்பெறுவர் தீமைசெய்தார் தீமைபெற்று நலிவர் தாமே.(4)

"நன்மைசெய்தார் நன்மைபெறுவர் தீமைசெய்தார் தீமைபெறுவர்" என்பது பழமொழி.

புல்லறிவுக் கெட்டாத தண்டலையார் வளர்ந்தழைத்த பொன்னி நாட்டிற்
சொல்லறமா தவம்புரியுஞ் சௌபரியுந் துறவறத்தைத் துறந்து மீண்டா
னில்லறமாம் வள்ளுவர்போற் குடிவாழ்க்கை மனைவியுட னடத்தி நின்ற
வில்லறமே பெரிதாகுந் துறவறமும் பழிப்பின்றே லியற்கை தானே. (5)

சௌபரி என்பவர் ஒருமுனிவர். இவர் ஒரு காலத்து யமுனை நதிக்குத் தீர்த்தமாடச்சென்று அந்நதிக்கரையில் நிற்கையில், மீனிரட்டைகள் தமது பலகுஞ்சுகளையும் இடையில்விட்டுத் தாம் அவைகளுக்குக் காவலாய் இருபக்கத்திலும் இருந்து பாதுகாத்து விளையாடுதலைக் கண்டு, தாமும் அவ்வாறிருக்க வெண்ணி, மாந்தாதாவின் நூறு குமாரிகளை மணந்து அப்பெண்கள்களிக்க இன்பந்தந்து, இருக்கையில், மாமன் மாமிமார்கள் இந்தமுனிவர்க்கு நம்முடைய குமாரிகளைக் கொடுத்

தோமே எனச் சிறிதுநாள் பொறுத்து அப்பெண்களைக் காணவர, முனிவர், ஒவ்வொரு பெண்ணினிடத்தும் ஒவ்வொருவராகத் தனித்தனி யிருத்தல்கண்டு களித்துச் சென்றனர் என்பது கதை. இதனை, அபி தானசிந்தாமணியிற் காண்க. "அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்-பிறன்பழிப்ப தில்லாயி னன்று"-என்பது திருக்குறள். "இல் லற மல்லது நல்லற மன்று"-என்பது ஆத்திசூடி. 'அறத்து ளில்லறமேபோலும்'-என்பது மாயூரப்புராணம்.(நாட்டுப்படலம். க.)திரு வள்ளுவர்மனைவியின்பெயர்-வாசுகி.

முக்கணர்தண் டலைநாட்டிற் கற்புடைமங் கையர்மகிமை மொழியப் போமோ
வொக்குமெரிகுளிரவைத்தாளொருத்திவில்வேடனையெரித்தாளொருத்திமூவர்
பக்கமுற வமுதளித்தா ளொருத்தியெழு பரிதடுத்தா ளொருத்தி பண்டு
கொக்கெனவே நினைந்தனையோ கொங்கணவா வென்றொருத்தி கூறினளே. (6)

எரிகுளிரவைத்தாள்—சீதாபிராட்டி. அனுமன்வாலிற் றீக்கொளுத் தியபோது சுடாதிருக்கும்படி செய்தனள். இராமாயணம், சுந்தர காண்டம், இலங்கை யெரியூட்டுபடலத்திற் காண்க.

வேடனை யெரித்தவள்—தமயந்தி. தன்னைவிரும்பிவந்த வேடனை யெரித்துவிட்டாள். நைடதம்-பிரிவுறுபடலத்திற் காண்க.

மூவர் பக்கமுற வமுதளித்தா ளொருத்தி—அத்திரிமுனிவர் மனைவி, அநசூயை. தன்னைவிரும்பிவந்த திரிமூர்த்திகள் அமுதுவேண்ட, அவ்வாறே யமுதளித்துத் தன்கற்பினால் அவர்களைப் பிள்ளைகளாகப் பெற்றாள். அம்மூவரையும் முறையே துருவாசர் தத்தாத்திரேயர், சோமர் என்பவராகப் பெற்றாளென்பர். (அபிதானசிந்தாமணி.)

எழுபரிதடுத்தாள்—நளாயினி; மௌத்கல்யமுனிவர் மனைவி. முனி வர் பரத்தைவீட்டுக்குப்போகவேண்டுமெனக்கூற, இவளிசைந்து நடக்க முடியாத பிணியாளராயிருந்த அம்முனிவரைக் கூடையில் வைத்து இரவிற் றூக்கிக்கொண்டுபோகும்போது, பூர்வகர்மத்தாற் கழுவிலிடப் பட்டுக்கிடந்த மாண்டவியமுனிவர்காலிற் றட்டவே அவர்வருந்தி யிவளை நோக்கி விடிந்தபின் நீ விதவையாகக்கடவாயென்று சபிக்க, இவள் விடியாதிருக்கக்கடவதென்று மறுத்துச் சபித்தாள்; அதனால் விடியா திருந்ததுபற்றித் தேவர் முதலாயினர் நித்தியகரும நடவாமைகண்டு, அவர்கள் மாண்டவியமுனிவரைவேண்ட, அம்முனிவர் இவளைவேண்டப் பொழுதுவிடியச் செய்தாள் என்பது மகாபாரதம்.

"கோக்கெனவே நினைந்தனையோ கொங்கணவா" என்றவள்— திருவள்ளுவர்மனைவியாகிய வாசுகி. மேலே பறந்துபோகிற கொக்குக் கழித்த மலம் தம்மேல்விழக் கோபமுண்டாகிப் பார்த்து, அக்கொக்கினை யெரித்த கொங்கணமுனிவர் வாசுகிமனையிலேவந்து பிச்சைகேட்ட போது வாசுகி சிறிது தாமதித்துக்கொண்டுவந்த காரணத்தால் முனிவர் கோபித்துப்பார்க்கக்கண்ட இவள் 'கொக்கென்று நினைந்தனையோ கொங்கணவா' என்றாள். முனிவர் கர்வபங்கமுற்றுப் போனார். இதனை அபிதானசிந்தாமணியி லறிக.

நன்றிதரும் பிள்ளையொன்று பெற்றாலுங் குலமுழுது நன்மை யுண்டா
மன்றியறி வில்லாத பிள்ளையொரு நூறுபெற்று மாவ துண்டோ
மன்றினடம் புரிவாரே தண்டலையா ரேசொன்னேன் வருடந் தோறும்
பன்றிபல வீன்றுமென்ன குஞ்சரமொன் றீன்றதனாற் பலனுண் டாமே. (7)

"பன்றி பலகுட்டிபோட்டென்ன? யானை ஒரு குட்டிபோட்டாற் போதும்" என்பது பழமொழி.

அல்லமருங் குழலாளை வரகுணபாண் டியராச ரன்பா லீந்தார்
கல்லிலைதனின் மென்றமிழ்ந்த வூனமுதைக் கண்ணப்பர் கனிவா லீந்தார்
சொல்லியதண் டலையார்க்குக் கிரையுமா வடுவுமொரு தொண்ட ரீந்தார்
நல்லதுகண் டாற்பெரியோர் நாயகனுக் கென்றதனை நல்கு வாரே. (8)

கல்லில—இலையாற்றைத்ததொன்னை.

வரகுணபாண்டின் மனைவியையீந்தது:—வரகுணபாண்டியன் ஒருநாள், குதிரைமேலேறி வேட்டைக்குச்செல்லும்போது, வழியிற்படுத்திருந்த ஓர்அந்தணனைத் தன்குதிரை மிதித்துக்கொல்ல, அதனாற் றன்னைத்தொடர்ந்த பிரமகத்தி நீங்குவதற்காகத் திருவிடை மருதூருக்குச் சென்று, அங்கே கோயில்கொண்டுள்ள மருதவாணர் கிருபையால், அப்பிரமகத்தி நீங்கப்பெற்றுச் சிலகாலம் அங்கிருந்தபோது, தான்மணம் புரிந்த மனையாளின் பேரழகைநோக்கி, இந்த நல்ல பெண்ணைச் சிவபெருமானுக்குக் கொடுக்கவேண்டுமென நினைத்து, மனையாளை யழைத்துக் கொண்டு இரவிலே திருக்கோயில்வாயிலை யடைந்து, "கோயிலைத்திற விடைமருதாவெனக்கூவு—வாயிலைத்திறந்திறைவனும் வரகுணனென்ன" இவன், சுவாமி, இவளை யேற்றுக்கொள்ளவேண்டுமெனக் கொடுத்துவந்தான். பின் மருதவாணர் அவளைவிழுங்கிக் கையைமாத்

திரம் விழுங்காமல் வெளியேதோன்ற வைத்திருந்தார். விடிந்தபின்பு சுவாமிதரிசனம்செய்தவர்கள்மூலமாய் இவ்விஷயமறிந்த அரசன் திடுக்கென ஓடிவந்து, சுவாமி! பாவியாகிய யான் பிடித்ததென்றோ? கையை மட்டும் நீக்கிவிட்டீரென்று கூறச் சுவாமி அக்கையையும் விழுங்கி விட்டார். இக்கதையைத் திருவிடைமருதூர்ப்புராணத்தி லறிக.

கண்ணப்பநாயனர் ஊனமுதருத்தியது:–பொத்தப்பிநாட்டிலுள்ள உடுப்பூரில் வேடராசனயிருந்த நாகனுக்கு, முற்செய்ததவத்தாற் பிள்ளையாயவதரித்த திண்ணனரென்பவர், தங்கள் குலத்துக்குரிய வில்வித்தை முதலியன இளமையிலேயே கற்பிக்கப்பெற்று வளர்கின்றநாளில், ஒருநாள் இவர் வேட்டையாடுவதற்காக வீரர்களுடன் வனத்திற்சென்று, மிருகங்களைக் கொலைபுரியும்போது, ஓர்பன்றி தமக்ககப்படாது நீங்கித் தென்றிசைநோக்கிச் செல்ல அதுகண்ட இவர் வீரர்களை நீங்கிப் பன்றியின்பின் றொடர்ந்துசென்று காளத்திமலையைக் கண்டார். அப்போது முன்செய்த தவப்பெருக்கமானது அன்பினைத் தோற்றுவிக்க, அதனுலளவிலாத ஆசை அதிகரிக்க, அம்மலையைநோக்கி யேறிக் காளத்திநாதரைக் காணும்போது, திருவருள்நோக்கம் பொருந்த, அதனலே முற்பிறப்பின் சம்பந்தம் நீங்க, அந்நாதரிடத்து அன்புருபமாக விளங்கினர். பின்பு திண்ணனர் சுவாமியை ஓடித் தழுவி மோந்துநின்று, சுவாமி! வேடர் மிருகங்களிருக்கின்ற விடத்திலே துணையின்றி யிருக்கலாமோ? என்று வருந்தி, நீர்வார்த்துப் பூவும் பச்சிலையும் சாத்தியிருப்பது கண்டு, சுவாமிக்கு நல்லசெய்கை யிவையாமெனக் கடைப்பிடித்துத் தாமு மவ்வாறு செய்யவெண்ணிச் சுவாமியைப் பிரிந்துபோகமுடியாதவராய்ப் போவாராய், மீளவந்து தழுவுவாராய்க் கானகத்துச்சென்று கொன்றமிருகத்தின் இறைச்சியமுதைக் கல்லையிலும், திருமஞ்சனமாட்ட நீரை வாயிலும், பறித்த மலரிலைகளைக் குடுமியிலும் வைத்துக்கொண்டு வில்லையும் பாணத்தையும் ஒருகையிலேந்திச் சுவாமிபசித்திருப்பரென்று விரைந்துவந்து திருமுடியிலிருக்கிற மல ரிலைகளைக் காலிலணியும் செருப்பான்மாற்றி, உள்ளன்பைச் சொரிவார்போல்,வாயிற்கொண்டுவந்த நீரைச் சொரிந்து, குடுமியிற் கொண்டுவந்த பத்திரபுஷ்பங்களை வணங்கிச் சாத்திக் கல்லையிற்கொணர்ந்த ஊனமுதை எதிரேவைத்துப் பக்குவம்வரக் காய்ச்சி மென்றுபார்த்தது; சுவாமி! இந்த இறைச்சி, நல்ல இறைச்சி; இதை யமுதுசெய்யவேண்டுமென வேண்டினர். அப்போது இரவும்

வந்தது. பின் திண்ணனர் சுவாமியை மிருகங்கள் துன்புறுத்து மென்று அம்பையும் வில்லையுந் தாங்கிப் பக்கத்திலே விழித்துக்கொண் டலாது நின்றார். அவ்வாறிருந்தவர் விடியும்போது திருவமுது கொண்டுவருவதற்குப் போயினர். பின்பு சுவாமியைப் பூசிக்கவந்த சிவகோசரியாரென்பவர், பூசைக்குவேண்டிய உபகாரணங்களுடன் வந்து பார்த்து, இறைச்சிமுதலாயின கிடக்கக்கண்டு மிகவருந்தி இந்த அநுசிதம் செய்தார் வேடரே; சுவாமி! இதற்குந் திருவுள்ளங்கொள்ளலாமோ? என்று விண்ணப்பஞ்செய்து இறைச்சிமுதலியவெல்லாம் நீக்கி, நீராடி வந்து, பரிசுத்தமாக்கி வழக்கப்படி பூசைசெய்து வணங்கித் தாமிருக்கு மிடம் சென்றார். அதன்பின்பு திண்ணனர் வழக்கப்படி இறைச்சி முதலியனவும், தேனும் கொண்டுவந்து முன்புபோல் அபிஷேகமுதலியன செய்து தேனுடன்கலந்த ஊனமுதை யெதிரேவைத்துச் சுவாமி! இதில் தேனுங் கலந்திருக்கின்றது; முன்னையினும் நன்றாயிருக்கின்றது; அடியேனும் சுவைகண்டேன் என்று கூறித் திருவமுதுசெய்யவேண்டித் தம் பூசையை முடித்துச் சுவாமிக்கு எதிரேநின்று, இரவிலுறங்காராய்ப் பகலில் வேட்டையாடுபவரா யிருந்தார். பின்னர்ச் சிவகோசரியார் பழையபடி பூசித்துச் சுவாமியை வேண்டிப் போயினர். அவர்கனவிற் சுவாமி யெழுந்தருளி "வேடனென் றவனைநினையாதே. அவ னன்பின்செயலை யானே யுனக்குக் காட்டுகின்றேம்; நீ யொளித்திருந்து பார்ப்பா" யென்று மறைந்தருளினர். உடனே சிவகோசரியாரும் விழித்து மகிழ்ந்து வந்து மறைவாயிருந்தார். திண்ணனரும் ஆறாவதுநாளில் வழக்கப்படி ஊனமுதுமுதலாயின கொண்டுவரும்போது சுவாமி வலக்கண்ணில் உதிரமொழுகும்படி யிருந்தார். திண்ணனர் கண்டவுடன் பதறிக் கையிலிருந்த ஊனமுது முதலாயின கீழேவிழத் தாமும் விழுந் தழுது இவ்வாறுசெய்தவர் வேடரோ? விலங்குகளோ? என்று தேடிக் காணாது சுவாமியைக் கட்டிக்கொண்டு கதறி, அழுதுபுலம்பி, என் செய்தாற் றீருமென்றெண்ணிப் புண்ணைத்தீர்க்கச்செய்யு மருந்தைத் தேடிக் கொண்டுவந்து பிழிந்து சுவாமிகண்ணில் வார்த்தார். அம்மருந்தாற் றீராது பின்னு மிரத்தம் அதிகமாகவொழுக, இனி யென்செய்வோ மென்றுவருந்தி யோசித்து, ஊனுக்கு ஊனிடவேண்டுமென்னும் பழமொழியைத்தெரிந்து, என்கண்ணை யம்பாற்றோண்டிச் சுவாமிகண்ணி லப்பினல் இரத்தம் விழாதிருக்குமென்று நினைத்து, மகிழ்ந்தமனத் தோடு முன்னிருந்து தன்கண்ணை யம்பாற் றோண்டியெடுத்துச் சுவாமி

ஸ்ரீ

திரிகூடராசப்பன்கவிராயரியற்றிய

# திருக்குற்றாலமாலை.

இது:

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச்

செந்தமிழுதவிப்பத்திராதிபர்

## இராமாநுஜையங்காரால்

பரிசோதிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப் பிரசுரம்—௪௪.

மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலைப்

பதிப்பு.

1921.

ஸ்ரீ:

# திருக்குற்றாலமாலை

## முகவுரை.

---

திருக்குற்றாலமென்பது பாண்டிநாட்டைச்சேர்ந்த தென்னாரியநாட்டுள், செந்தமிழ்ப்பரமாசாரியராகிய அகத்தியமுனிவரது பொதியமலைச் சார்பிலுள்ளதொரு வரை. இது, அயன் மால் சிவன் என மூன்று மூர்த்தியுமாய் விளங்கும் முழுமுதற்கடவுள், முறையே ஒவ்வொருயுகத்தும் ஒவ்வொருமூர்த்தியாய்வீற்றிருந்து, காட்சியளித்து, உலகத்தையுய்வித்தற்கு இடமாய் விளங்குவது. செண்பகச்சோலை, சந்தனச்சோலை முதலிய ஆராமங்களையும், வடவருவி, சித்திராநதி, சிவமதுகங்கை, தேனருவி முதலிய தீர்த்தவிசேடங்களையும் உடையது. தன்பால் வருவார்க்குப் பிறவியாலும் பிறவற்றாலும் வரும் இளைப்பகற்றி இன்பமளிக்கவல்லது. இது, திரிகூடாசலம் என்ற பெயராலும் வழங்கப்படும். இது திருஞானசம்பந்தரது தேவாரப்பதிகமிரண்டு கொண்டது. இதன் விசேடமெல்லாம் திருக்குற்றாலக்குறவஞ்சி, திருக்குற்றாலத் தலபுராணம் முதலியவற்றால் விளங்கும். இங்குக் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள சுவாமிக்குக் குறும்பலாவீசர், குற்றாலநாதர், திரிகூடநாதர் என்பனவும், அம்பிகைக்குக் குழல்வாய்மொழி என்பதும் திருநாமமாக வழங்கும்.

மாலையென்பது பிரபந்தவகையிலொன்று; திருக்குற்றாலமாலையென்னு மிது திருக்குற்றாலத்தலத்தி லெழுந்தருளியுள்ள சுவாமிவிஷயமாக நூறுகட்டளைக்கலித்துறைச் செய்யுளால் இயற்றப்பெற்றது.

இம்மாலையை இயற்றியவர் திருக்குற்றாலத்துப் பக்கமாகிய மேலகாத்து வைசியவேளாளகுலவிளக்காக விளங்கித் திருக்குற்றாலத் தலபுராணமுதலிய பலநூல்கள்* இயற்றிப் புலவர்திலகராய் வீற்றிருந்த திரிகூடராசப்பன்கவிராயராவர்.

இவர் குற்றாலக்குறவஞ்சிபாடித் திருக்குறும்பலாவீசர்சந்நிதியிலரங்கேற்றி மதுரைநாடாண்ட முத்துவிஜயரேங்கசோக்கலிங்கநாயக்கமன்னனிடம், திருக்குற்றாலநாதர்கோயில்வித்துவான் என்ற சிறப்புப்

---

* இவரியற்றிய பலநூல்களாவன:—திருக்குற்றாலத் தலபுராணம், திருக்குற்றாலக்குறவஞ்சி, திருக்குற்றாலயமகவந்தாதி, திருக்குற்றாலச்சிலேடைவெண்பா, திருக்குற்றாலநாதருலா, திருக்குற்றாலப் பரம்பொருண்மாலை, திருக்குற்றாலக் கோவை, குழல்வாய்மொழிகலிப்பா, கோமளமாலை, திருக்குற்றாலவெண்பாவந்தாதி, திருக்குற்றாலநாதர்பிள்ளைத்தமிழ், நன்னகர்வெண்பா முதலியனவாம்.

பெயரும், கோயில் முதன்மரியாதையும், குறவஞ்சிமேடு* என்னும் நன் செய்நிலமும் பரிசிலாகப்பெற்றவர். குறவஞ்சிமேட்டுத் தானசாசனத்தால் இவர் இற்றைக்குச் சற்றேறத்தாழ இருநூற்றுப்பத்துவருடங்கட்குமுன் இருந்தவரென்று தெரிகிறது. சொற்சுவை பொருட்சுவைபட அலங்காரங்களுடன், செய்யுட்களை இயற்றுவதில் இவர் சிறந்தவரென்பது இவரியற்றிய நூல்களால் நன்குவிளங்கும்.

மேலும், இம்மாலையிலிருந்து, இவர் திருக்குற்றாலவாசத்தை யிழந்து நெடுநாள் வேறிடத்து வாசஞ்செய்திருந்தாரென்றும் (செய்யுள்—7,47,48,65), திருக்குற்றாலநாதரே இவரை வலிந்தாட்கொண்டு தம்மைப் பாடச்செய்தனரென்றும் (செய்–27, 93), இவர் ஆவணிமூலத்தில் வாகனக்கவிமுதலியன பாடுவதுண்டென்றும் (செய்–100), இவர் திருக்குற்றாலநாதர்கோயில் அநந்தகொத்துப்பரிஜனத்தாருள் ஒருவரென்றும் (செய்–100) புலனாகிறது.

இம்மாலை, பிறமததூஷணை, பிறதெய்வதூஷணை முதலியனவின்றி, இயற்கைவருணனையும் உருவகம் முதலிய பல அணிகளுமுடையதாயும் படிப்பவர்க்குப் பத்திரசத்தைப் புகட்டுவதாயும் செய்யுளியற்றுந்திறத்தை யுண்டாக்குவதாயும் இருத்தலால், கலாசாலை மாணவர்களுக்குப் பாடமாக வைக்கத் தகுதியுள்ளதாயிருக்கிறது; இதுவரை அச்சிடப்பட்டதாகத்தெரியவில்லை. இது அச்சிடப்படிற் பலர்க்கும் பயன்படுமென்று கருதிச் சங்கத்துப் பாண்டியன்புத்தகசாலையிலுள்ள ஏட்டுச்சுவடி† ஒன்றையேகொண்டு எனக்குத் தெரிந்தவரை திருத்தவேண்டியவற்றைத்திருத்தி அரும்பத வுரையொன்று எழுதி இறுதியிற் சேர்த்து வெளியிடலானேன்.

இதைப் பதிப்பித்ததில், சிற்றறிவினனாகிய என்னாலேற்பட்ட பிழைகளைப்பொறுத்துத் திருத்தியளிக்குமாறு அறிஞர்களைப் பன்முறை வேண்டுகிறேன்.

இராமாநுஜையங்கார்
செந்தமிழுதவிப்பத்திராதிபர்.

---

* குறவஞ்சிமேடு, கோயின்முதன்மரியாதை இவற்றை இப்போதும் இவர் பெண்வழிச்சந்ததியார் அனுபவித்துவருவதாகத் தெரிகிறது.

† இது, "மதுரைத்தமிழ்ச்சங்கத்து" நூற்பரிசோதகரும், திருவாவடுதுறையாதீனவித்துவானுமாகிய ஸ்ரீமத் சே. ரா. சுப்பிரமணியக்கவிராயரவர்களாற் பாண்டியன்புத்தகசாலைக்குக் கொடுக்கப்பட்டதென்று தெரிகிறது.

உ

## மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1921-ஞு ஜூன்மாத வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1921 June | | | 1920 June | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | |
| (1) Donations, Contributions வகையில் வரவு ... | 496 | ... | ... | | | |
| (2) M.R.C.C. Bank ல்போட்டுள்ள தொகையின்பேரில் வட்டி வரவு ... | 781 | 6 | 6 | | | |
| (3) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு. | 158 | 3 | 3 | | | |
| (4) (a) M.R.C.C. Bankல் Deposit செய்துள்ள தொகையை Withdraw செய்தது ரூ50011—5—0 | | | | | | |

| விவரம் | செலவு 1921 June | | | 1920 June | | |
|---|---|---|---|---|---|---|
| I GENERAL SECTION: | | | | | | |
| (1) ESTABLISHMENT:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டு ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 106 | ... | ... | | | |
| (b) கலாசாலைஉபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 112 | ... | ... | | | |
| (c) Literary Section சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 20 | ... | ... | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையிற்செல் ... | 7 | 8 | 9 | | | |
| (3) புத்தகசாலைக்குப் புத்தகம் வாங்கிய வகையிலும், பத்திரிகைக்குச் சந்தாசெலுத்திய வகையிலும் செலவு. ... | 39 | 12 | ... | | | |
| (4) Furniture வாங்கிய வகையில் செல் ... | 3 | 4 | ... | | | |

| | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|
| (b) Miscellaneous 0—8—0 | | | | | | |
| ஆக ரூ50011—13—0 | 50011 | 13 | ... | | | |
| மொத்தம் ... | 51447 | 6 | 9 | 50260 | 9 | ... |
| **II Editorial Section:** | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தாவரவு | 12 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகைக்குச் சந்தாவரவு ... | 23 | 2 | ... | | | |
| (3) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் வித்த வகையில் வரவு ... | 72 | 8 | ... | | | |
| மொத்தம் ... | 107 | 5 | ... | 35 | 2 | ... |
| **III Press Section:** | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்வில் நடந்த வேலைகளுக்கு அச்சுக் கூலி வரவு ... | 207 | 7 | ... | | | |

| | ரூ. | அ. | பை. | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|---|
| (5) சங்கக்கட்டட வகையரா ரிப்பேர்சம்பந்தமாகச் செலவு ... | 87 | 3 | ... | | | |
| (6) தபால், தந்திவகையில்... | 10 | 3 | 9 | | | |
| (7) சங்க சில்லரைவேலைகள் சம்பந்தமாகஅச்சுக்கூலிபைண்டிங் கூலி வகையிற் செல் ... | 22 | 10 | ... | | | |
| (8) கடன்வகைக்குச் செல்... | 100 | | ... | | | |
| (9) (a) M.R.C.C. Bankல் மறுபடியும் Deposit செய்தது ரூ50011—5—0 | | | | | | |
| (b) Miscellaneous செலவு ரூ0—10—0 | | | | | | |
| ஆக ரூ50011—15—0 | 50011 | 15 | 0 | | | |
| மொத்தம் ... | 50520 | 8 | 6 | 50843 | 4 | 10 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) ஷை வேலைகட்காகக் காகிதக்கிரயம் வரவு ... | 18 | 1 | ... | | | |
| (b) Binding: | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீசில் நடந்த வேலைகளுக்குப் பைண்டிங்சார்ஜ் வரவு ... | 72 | 8 | ... | | | |
| மொத்தம் ... | 298 | ... | ... | 100 | ... | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| II Editorial Section: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 35 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகை, சங்கப்பதிப்புப்புத்தகம் இவற்றின் பிரசுர சம்பந்தமாக வாங்கிய காகிதம் அச்சுக்கூலி வகைக்குச்செல்... | 239 | 10 | 3 | | | |
| (3) தபால், தந்திவகையிற்செல் | 24 | 10 | 9 | | | |
| மொத்தம் ... | 299 | 5 | ... | 8 | 4 | 9 |
| III Press Section: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 148 | 9 | 7 | | | |
| (2) றிப்பேர் வகையிற்செலவு... | 20 | 14 | ... | | | |
| (3) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 49 | 2 | 8 | | | |
| (4) Miscellaneous செலவு ... | 28 | 6 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 51852 | 11 | 9 | 50395 | 11 | .. |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை. ... | 365 | 14 | 11 | 819 | 7 | 6 |
| ஆகமொத்தம் ரூ ... | 52218 | 10 | 8 | 51215 | 2 | 6 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (b) Binding: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 18 | 7 | 9 | | | |
| (2) Contingencies வாக்கிய வகையிற் செலவு ... | 52 | ... | ... | | | |
| மொத்தம் ... | 317 | 8 | ... | 22 | 7 | 3 |
| ஆகமொத்தம் செலவு ரூ ... | 51137 | 5 | 6 | 50874 | ... | 10 |
| மாதமுடிவில் மீதி இருப்புத் தொகை ... | 1081 | 5 | 2 | 341 | 1 | 8 |
| ஆகமொத்தம் ரூ. ... | 52218 | 10 | 8 | 51215 | 2 | 6 |

| | |
|---|---|
| *By C Pass Book | 550—0—0 |
| Cash on hand | 531—5—2 |
| | 1081–5—2 |

*Audited and found correct,*
**V. S. RAMASWAMI,**
AUDITOR,
2—7—21.

**LAKSHMINARAYANAN,**
*Manager,*
MADURA TAMIL SANGAM.
1—7—21.